

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ श्रीमन्नारायणीयम् ॥



**Text in Sanskrit with word for word Tamil Translation in Prose Order.**

*By*

***N. Somasundara Dikshitar,***

*Sanskrit Pandit*

M. N. K. Memorial High School, Chittilanchery.



*Published with the aid of*

***Sri. M. N. Ramaswamy Iyer,***

*Banker, Palghat*

BY

RAMAYANA PUBLISHING HOUSE.

SRI RAMAMANDIR,

BANK ROAD, ALATHUR

1954 [redacted]

## ॥ विषयानुक्रमणिका ॥

ॐ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# முகவுரை.

ஒரு புஸ்தகத்தைப் படிப்பதற்குமுன் அப்புஸ்தகத்திலுள்ள பொருளையும் அதை இயற்றியவருடைய ஸ்வபாவகுணங்களையும் அறிந்திருந்தால் அப்புஸ்தகத்தைப் படிக்க ஊக்கமுண்டாகுமென்பது இயற்கையாகையால் முதலில் கிரந்தகர்த்தாவையும், பிறகு கிரந்தத்தையும் பற்றி வாசகர்களுக்கு அறிமுகப்படுத்த உத்தேசிக்கப்படுகின்றது.

## கிரந்தகர்த்தாவின் வரலாறு.

நாராயணீயத்தை இயற்றியவர் நாராயணபட்டதிரி என்பவர். அவர் கேரளதேசத்தில் மிகப் பிரசித்திபெற்ற மஹாகவிகளில் ஒருவர்.

भूखण्डे केरलाख्ये सरितमिह निलामुत्तरेणैव नावा-
क्षेत्राद्गव्यूतिमात्रे पुनरुपरिनवग्रामनाम्नि स्वधाम्नि ।
धर्मिष्ठाद्भट्टतन्त्राद्यखिलमतपटोर्मातृदत्तद्विजेन्द्राद्
जातो नारायणाख्यो निरवहदतुलां देवनारायणाज्ञाम् ॥

मीमांसादि स्वतातान्निगममखिलं माधवाचार्यवर्यात्
तर्के दामोदरार्यादपि पदपदवीमच्युताख्याद् बुधेन्द्रात् ।
तेषां कारुण्ययोगात् किमपि च कवितामात्रं कर्म मे तत्
भूयात्कृष्णार्पणं मे भवतु च सततं धीरधारैः कथायाम् ॥

என்று பட்டதிரி இயற்றிய 'प्रक्रियासर्वस्वं' என்ற நூலில் கூறியதிலிருந்து பட்டதிரியின் ஜனனம் முதலிய வரலாற்றை அறிய முடிகின்றது.

பட்டதிரி கேரளதேசத்தில் பாரதப்புழை என்று பிரசித்திபெற்ற நதியின் வடக்குக் கரையில் 'திருநாவா' என்ற பிரசித்த க்ஷேத்திரத்திலிருந்து சுமார் மூன்று மைல் தூரத்திலிருக்கும் 'மேல்புத்தூர்' என்ற கிருஹத்தில் (இல்லத்தில்) மிக தர்மிஷ்டனும் மீமாம்ஸா முதலிய எல்லா சாஸ்திரங்களிலும் பிரசித்த வித்துவானுமான 'மாத்ருதத்தன்' எனும் நம்பூதிரிப் பிராமணனுக்குப் புத்திரனாக ஜனித்தார். அவர், மீமாம்ஸை முதலியவற்றை தன் பிதாவான மாத்ருதத்தரிடமிருந்தும், வேதத்தை 'மாதவ'ரிடமிருந்தும், தர்க்கசாஸ்திரத்தை 'தாமோதர'ரிடமிருந்தும், வியாகரணத்தை கேரளத்தில் பிரசித்த வித்துவானை திருக்கண்டியூர் 'அச்யுத'ப்பிஷாரடியிடமிருந்தும் கற்றுக்கொண்டார். பட்டதிரி 'தேவநாராயணன்' என்ற அம்பலப்புழை அரசனுடைய ஆச்ரிதனாகவிருந்து, அவ்வரசனுடைய கட்டளைக்

கிணங்கி 'प्रक्रियासर्वस्वं' என்ற நூலை இயற்றினர் என்று மேற்கூறிய சுலோகங்களிலிருந்து தெளிவுற அறிய முடிகிறது. இவை முற்றிலும் நம்பக்கூடியவையே. பட்டதிரி தான் இயற்றிய நூல்களில் அனேக இடங்களில் கலிதினத்தைக் குறிக்கும் பதங்களைக் கூறுகின்றார். அவைகளில் प्रक्रियासर्वस्वத்தில் கூறிய

अयमच्युतगुरुकृपया पाणिनिकात्यायनादिकारुण्यात् ।
यत्नः फलप्रसूः स्यात् कृतरागरसोऽद्य शब्दमार्गजुषाम् ॥

என்ற சுலோகத்தில் மூன்றாம் பாதத்தில் கலிதினத்தைக் குறிப்பிட்டிருப்பதால் இந்த प्रक्रियासर्वस्वं கலிவருஷம் 4718ல் எழுதப்பட்டதாக அறியப்படுகிறது. அதுபோலவே நாராயணீயத்தின் கடைசி சுலோகத்தில் கூறப்பட்ட 'आयुरारोग्यसौख्यं' என்ற பதத்திலிருந்து கலிவருஷம் 4680ல் நாராயணீயம் எழுதப்பட்டதென அறியமுடிகிறது. பட்டதிரி சிறு வயதிலேயே நாராயணீயத்தை எழுதி முடித்தார் என்று ஒரு வதந்தியுமுண்டு. வாசுதேவகவி என்பவர் தனது 'भृङ्गसन्देश'த்தில் மாத்ருதத்தரையும் அவரது பாண்டித்யத்தையும் அவ்விதமே நாராயணபட்டதிரியையும் அவரது கவிதாசாதுரியத்தையும் மிகப் புகழ்ந்து கூறுகிறார். பட்டதிரி தன் பிதாவிடமிருந்து மீமாம்ஸாசாஸ்திரத்தில் பட்ட மதத்தை கற்றுக்கொண்டு அதில் மிகுந்த அபிமானமுடையவராகவும் இருந்தாரென்பதும் அவர் இயற்றியிருக்கும் 'मानमेयोदयं' என்ற கிரந்தத்தின் முதற்பாகத்திலிருந்து ஸ்பஷ்டமாக அறிய முடிகின்றது.

பட்டதிரி சிறுவயதில் குலோசிதமான வித்யாப்பியாஸம் செய்யாமல் காமாதுரனாக சுற்றித்திரிந்தாரென்றும், பிறகு அச்யுதப்பிஷாரடியின் உபதேசத்திற்கிணங்கி, அவரையே குருவாக வரித்து வித்யை கற்க முயன்றார் என்றும் பலவித அவதூறுகள் பிரசித்தங்களாகக் கேட்கப்படுகின்றன. ஆயினும் அவைகளை நம்பமுடியாதென்பது முன் கூறப்பட்ட 'मीमांसादि स्वतातात्' என்ற சுலோகத்தின் கருத்தை நன்கு ஆலோசித்தால் விளங்கும். எல்லா சாஸ்திரங்களையும் கற்ற பிறகுதான் வியாகரணசாஸ்திரத்தைக் கற்றார் என்பதும் முன்கூறிய சுலோகத்திலிருந்து ஊஹிக்க முடிகின்றது. அவ்விதம் வியாகரணசாஸ்திரத்திற்கு மாத்திரம்தான் அச்யுதப்பிஷாரடியை குருவாக வரித்தார். ஆகையால் மற்ற குருக்களைப்போல அவரும் ஒருவர் என்றே கூறலாம். ஆகையால் முன்சொன்ன அவதூறுகளுக்கு ஆஸ்பதமே இல்லை.

பட்டதிரிக்கு வாதரோகமுண்டாயிற்றென்பதும், அதனால் அவர் மிகவும் வருந்தினர் என்பதும் அவருடைய ஜீவிதத்தில் மிக முக்யத்வம் வாய்ந்த நிகழ்ச்சிகள். அனர்த்தத்திற்குக் காரணங்களான யௌவனம், பிரபுத்வம், பாண்டித்யம் என்றிவையெல்லாம் ஒன்றுசேர்ந்தால் அஹங்காரம் முதலிய தோஷங்கள் உண்டாகுவது சாதாரணம். ஆனால் இவருக்கு அந்த அஹங்காரம் நீங்கி மனது நிர்மலமாய் பரிபாகத்தையடைந்து, ஈசுவரனை

சேவிக்க வாதவியாதி மிகவும் உதவியாக இருந்தது என்றே சொல்லவேண்டும் அது அவருக்கு ஓரனுக்கிரஹமாகவும் ஆயிற்று. ஏனென்றால் மிகப் பரிசுத்தமான குருவாயூர் க்ஷேத்திரத்திற்குச் சென்று ஸ்ரீ குருவாயூரப்பனை சேவிப்பதற்கும், ஸ்ரீமத் பாகவதசாரமான ஸ்ரீமந்நாராயணீயத்தை இயற்றுவதற்கும், அதன்மூலம் கவியின் புகழ் பரவுவதற்கும் மூலகாரணம் வாதவியாதியொன்றேயாகும்.

हे रोगा मम यूयमेव सुहृदो यैर्निःस्पृहोहं कृतः
काव्यालङ्कृतितर्ककोविदकथायोगेषु भोगेषु च ।
नो चेत्कृष्णपदारविन्दभजनं वेदान्तचिन्तामपि
त्यक्त्वा श्व श्वः इति भ्रमादहमहो याम्येव याम्यां दिशम् ॥

என்று பட்டதிரியே வாதவியாதி தனக்குச் செய்த குணங்களைப்பற்றிக் கூறியிருப்பதால் பட்டதிரியின் சுபாவகுணங்கள் எவ்விதம் மாறுதலை அடைந்திருக்கின்றன என்பது தெளிவாகின்றது. வியாதி வந்ததிலிருந்தே பட்டதிரி விஷயசுகங்களில் பற்றற்று பக்தனாக மாறி கடைசிகாலம் வரையில் அதே நிலையில் இருந்தாரென்பதும் புலப்படுகிறது. ரோகியாய் தன்வசமற்று குருவாயூருக்குச் சென்று நாராயணீயஸ்தோத்திரத்தை இயற்றிய பிறகு ஆயுராரோக்யங்களுடன் திரும்பிச் சென்றார். பகவானுடைய அனுக்கிரஹத்தால் வாதவியாதி சாந்தமானதைப் பற்றி கவியே பின்வரும்

पूर्वं तावदयि त्वदङ्घ्रिरजसां योगे रजोहीनता
लोकस्येति विचित्रमद्य तु पुनश्चित्रान्तरं दृश्यते ।
वातैः पांसुनिरास एव हि परं दृष्टस्त्वदीयाः पुनः
पादांभोरुहरेणवो विदधते वातस्य विद्रावणम् ॥

சுலோகத்தில் மிக சரசமாகக் கூறுகின்றார். சுலோகத்தின் கருத்தை இவ்விடத்தில் கூறுவது உசிதமாக இருக்குமாதலால் அதைக் கூறுகின்றோம். "உலகத்தில் சாதாரணமாக ஓரிடத்தில் பொடிகள் ஒன்றுகூட ஆரம்பித்தால் அவ்விடத்தில் மலைபோல அவை சேர்ந்துவிடுவது வழக்கம் ஆனால் நாங்கள் முதலில் ஒரு ஆச்சரியத்தைக் கண்டோம். அதாவது—தங்கள் திருவடிப் பொடிகள் ஒன்றுசேருமேயானால் உலகத்திற்கு பொடியே இல்லாமல் ஆகின்றது. தங்கள் ஸ்ரீபாதரேணுவைச் சேவித்த ஜனங்களுக்கு ரஜோகுணசம்பந்தமேயில்லையென்று தாத்பரியம். இப்பொழுது வேறொரு ஆச்சரியத்தைக் கூட காண்கின்றோம். என்னவென்றால்—காற்றினால் பொடிகள் தூரப் பறந்துபோவதுதான் முந்திக் காணப்பட்டிருக்கிறது. ஆனால் இப்பொழுது தங்கள் திருவடிப்பொடிகள் காற்றையே ஓட்டிவிட்டன" என்பதுதான். கவி தனது வாதரோகம் நிவிருத்தியானதை எவ்வளவு சரசமாக வர்ணிக்கின்றார். பட்டதிரியின் பஜனமும், ரோகசாந்தியும் குருவாயூர் க்ஷேத்திரத்தைப்பற்றி ஜனங்களுக்கிருந்துவரும் பக்திவிச்வாசங்கள் முன்னைவிட அதிகமாகப் பெருகக் காரணமாகின்றன.

## கவி இயற்றிய நூல்கள்.

நாராயணபட்டதிரி இயற்றிய நூல்களை நான்குவிதங்களாகப் பிரிக்கலாம். அவையாவன: 1) लघुकृतयः, 2) प्रबन्धाः, 3) शास्त्राणि, 4) स्तोत्राणि। இவ்விதம் நான்கு விதங்களாக எழுதப்பட்டிருக்கும் நூல்களை ஒவ்வொன்ருக விமரிசனம் செய்வதென்ருல் அதே ஒரு புஸ்தகமாக வளர்ந்துவிடுமாதலால் அவைகளை விமரிசனம் செய்யாமல் கவியின் கவிதாகுணங்களில் பிரதானமான சில அம்சங்களைப்பற்றிமட்டுமே விவரிப்பது உசிதமாக இருக்கும். மிகுந்த பக்தியைப் புகட்டுதல், நல்வழியுபதேசித்தல், இனிய சொற்கள் கூறுதல், புதுப்புதுக் கற்பனைகள், பயன்படும்படி சொல்லுதல், உசிதங்களான ரசங்கள், சப்தாலங்காரங்கள், விருத்தங்கள் இவைகளை அமைப்பதில் திறமை, வைவதிலும் புகழ்வதிலும் மிக வன்மை, உலகவ்யவஹாரத்தின் மர்மத்தைக் கூறுதல், சிலேஷை முதலிய அர்த்தாலங்காரங்களைக் கூறுவதில் ஆர்வம், வியாகரணம் முதலிய சாஸ்திரங்களை ஆதாரமாகக்கொண்டு புதுப் பதங்களையும் அபிப்பிராயங்களையும் வெளியிடுதல், வர்ணனுவிசேஷம் முதலிய பிரதானங்களான கவிதாகுணங்கள் பட்டதிரியின் கவிதைகளில் விசேஷமாக உள்ளன. மேற்கூறிய குணங்களனைத்தும் ஒன்றுசேர்ந்து மற்ற இடங்களில் காண்பதரிதே.

### लघुकृतयः ॥

देवनारायणप्रशस्तिः, मानविक्रमप्रशस्तिः முதலியவை. இவை பட்டதிரியின் ஜீவிதகாலத்திலிருந்த கேரளதேசத்தரசர்களைப்பற்றிய சிறிய காவ்யங்கள். லகுகிருதிகளுக்குள் सूक्तश्लोकाः என்ற சிறுநூல் 19 சுலோகங்களடங்கியது. அதில் ருக்வேதத்தின் மண்டலம், அஷ்டகம் முதலிய விபாகங்களைக் கூறுகின்ருர். அந்த வேதத்தை நன்கு அத்யயனம் பண்ணுத ஒருவருக்கு அதன் உட்பிரிவுகளை திறமையுடன் கூற முடியாதாகையால் அவர் அந்த வேதத்தை நன்ருகக் கற்றிருக்கவேண்டும். நாராயணீயம் 98-ாவது தசகத்தில் ருக்வேத மந்திரங்களிலிருக்கும் பதங்களைக்கொண்டே பகவானை ஸ்துதிப்பதால் முன் கூறின அபிப்பிராயம் திடமாகிறது.

### प्रबन्धाः ॥

பிரபந்தங்கள் சம்பூக்கள் போல கத்யங்களும் பத்யங்களுமுள்ளவைகள். அவைகள் பிரசித்தங்களான நாடகங்கள், சம்புக்கள் முதலியவற்றிலிருந்து சந்தர்ப்பத்திற்கனுசரித்து ஆவச்யங்களான பத்யங்களையும், கத்யங்களையும் எடுத்து, ரசானுகுணமாகத் தானும் சில கத்யபத்யங்களை இயற்றி பட்டதிரியால் பூர்த்தியாக்கப்பட்டனவென்று கூறுகின்றனர். அப்பிரபந்தங்களில் रामायणप्रबन्धः, भारतप्रबन्धः, भागवतप्रबन्धः என்றவை பிரதானங்களும் स्वाहासुधाकरः, अष्टमीप्रबन्धः முதலிய மற்றப் பிரபந்தங்களுமிருக்கின்றன. இவைகளில் அதிகப் பிரபந்தங்களும் மலையாளத்தில் பிரசித்தங்களான 'சாக்கியார் கூத்து', 'பாடகம்' முதலிய கதாகாலக்ஷேபங்களில் பிரயோகிக்கப்படுகின்றன. சிலவை அச்சிடப்பட்டுமிருக்கின்றன.

## शास्त्राणि ॥

प्रक्रियासर्वस्वं, अपाणिनीयप्रामाण्यसाधनं, धातुकाव्यं, मानमेयोदयः । இவைகளில் முதல் மூன்றும் வியாகரணசாஸ்திரத்தைப் பற்றியவை. நான்காவது பூர்வ மீமாம்ஸையில் பட்டமதத்தைக் கூறுவது. இதில் பௌத்தமதம், சார்வாக மதம், பிரபாகரமதம் முதலியன வெகு விமரிசையாகக் கண்டிக்கப்படுகின்றன. இதில் மானம் (பிரமாணம்) மேயம் (பிரமேயம்) என்று இரண்டு பிரிவுகள். அவற்றுள் பட்டதிரி மானத்தைமட்டும் எழுதி மேயமெழுதுவதற்குள் காலகதியடைந்திருக்கவேண்டும். மேயம் என்ற இரண்டாவது பாகம் மானவேதராஜாவின் வேண்டுகோளுக்கிணங்கி 'நாராயணன்' என்ற ஒரு பண்டிதனால் இயற்றப்பெற்றதென்று

" प्राङ्नारायणसूरिणा विरचितं तन्मानमेयोदयं
मोहात्पूरयितुं कृता मतिरियं सन्तः प्रसीदन्तु नः "

என்ற அவருடைய மங்களசுலோகத்திலிருந்து அறியமுடிகிறது. சாதாரணமாக கவி சாஸ்திரக்ஞனாகமுடியாது, சாஸ்திரக்ஞன் கவியாகமுடியாது என்பது இயல்பு. ஆனால் அது பட்டதிரிவிஷயத்தில் மாறுதலடைந்திருக்கின்றது. கவிதாகுணங்கள் அனைத்துமமைந்த ஒரு மஹாகவியாகவும், ஸகலசாஸ்திரபாரங்கதனான ஒரு மஹா பண்டிதனாகவும் பட்டதிரி விளங்கினார் என்றே சொல்லவேண்டும். பட்டதிரியின் வியாகரண பாண்டித்யத்தைக் கேட்டறிந்து, அவரை நேரில் தரிசிக்கவேண்டுமேன்றெண்ணங்கொண்டு மஹாவையாகரணனான பட்டோஜி தீக்ஷிதர் புறப்பட்டுவந்தாரென்றும், வழிமத்தியத்தில் பட்டதிரி காலகதியடைந்துவிட்டார் என்று கேழ்விப்பட்டு வருத்தத்துடன் திரும்பிச்சென்றார் என்றும் கூறுகின்றனர்.

## स्तोत्राणि ॥

श्रीपादसप्ततिः, नारायणीयं என்ற இரண்டு ஸ்தோத்திரங்களை பட்டதிரி இயற்றியதாக அறியப்படுகிறது. அவையில் श्रीपादसप्ततिः என்பது மலயாளத்தில் பிரசித்தமான மூக்கோலே என்ற க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ தேவியின் பாதாரவிந்தங்களை 'शार्दूलविक्रीडित' விருத்தத்தில் மிக அழகாக முன் கூறின கவிதாகுணங்கள் அனைத்துமமைந்த 71 சுலோகங்களால் ஸ்துதிக்கின்றார். கவிதைகளில் இதுதான் கடைசி கவிதையென்று கூறுகின்றனர்.

## नारायणीयम् ॥

நாராயண பட்டதிரியின் மிக மேன்மைபெற்று விளங்கும் ஸ்தோத்திரங்களில் முதல்ஸ்தானம்பெற்று விளங்குவது நாராயணீயம் என்ற ஸ்தோத்திரம். பட்டதிரி அவர்கள் வாதரோகத்தால் பரவசனாக இருக்கும்பொழுது மலயாளகவியான 'துஞ்சத்து ராமானுஜன் எழுத்தச்சன்' என்பவரின் உபதேசத்திற்கிணங்கி குருவாயூர் க்ஷேத்திரத்திற்குச்சென்று மத்ஸ்யாவதாரம் முதலிய பகவத்கதைகளை ஸ்தோத்திரரூபமாக இயற்றினார் என்று பெரியோர்கள் கூறுகின்றனர். பாகவதத்தில் கூறப்பட்டிருக்கும் விஷயங்களை

சுருக்கமாகவும், சாரத்தை விடாமலும் அழகாக வர்ணித்திருப்பது மிகவும் மெச்சத்தக்கதே. நாராயணீயம் பாகவதத்தின் சங்கிரகமாகிலும் பட்டதிரிக்கு இயல்பாக அமைந்திருக்கும் கவிதாகுணங்கள் அடிமுதல் முடிவரை குறைவில்லாமல் அமைந்திருக்கின்றன. பாகவதத்தில் கூறப்பட்டிருக்கும் விஷயங்களையும் கதைகளையும் அதில் கூறியிருப்பதுபோலவே தானும் கூறுவதென்றில்லாமல் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கும் சிற்சில கதைகளையும் விஷயங்களையும் சுருக்கமாகக் கூறவும், சிலவற்றை விட்டும் விடவும் செய்திருக்கின்றார். ஆனால் பாகவதத்திலிருக்கும் தொடர்பைமட்டும் கைவிடாமல் கதாம்சங்களை சங்கிரகித்திருக்கின்றார்.

நாராயணீயத்தில் நூறு தசகங்கள் இருக்கின்றன. ஒரு தசகம் என்பது பத்து சுலோகங்கள் கொண்டது. சில தசகங்களில் கதாபாகத்தையொட்டி பதினொன்றும் பன்னிரண்டும் பதினைந்தும் சுலோகங்கள் இருக்கின்றன. ஆகவே மொத்தம் 1034 சுலோகங்கள் இருக்கின்றன. சுலோகங்கள் விஷயானுசாரமாக பற்பல விருத்தங்களில் இயற்றப்பட்டிருக்கின்றன. காவியங்களில் நன்கு பிரசாரத்தில் இருக்கும் எல்லா விருத்தங்களுமே கையாளப்பட்டிருக்கின்றன. பட்டதிரி ஒவ்வொருநாள் ஒவ்வொரு தசகம் இயற்றினார் என்றும் சிலர் கூறுவர். பாகவதம் ஆதிமுதல் ஒன்பது ஸ்கந்தங்களில் கூறப்பட்டிருக்கும் கதைகளை நாராயணீயத்தில் முதல் 36 தசகங்களைக்கொண்டும், 37 முதல் 90 வரை தசகங்களால் தசமஸ்கந்தகதைகளையும், 91 முதல் 97-ஆவதில் 4 சுலோகங்கள் வரை பதினொன்றாவது ஸ்கந்தவிஷயங்களையும், 97-ல் 5-ஆவது சுலோகம்முதல் பன்னிரண்டாவது ஸ்கந்தகதையான மார்க்கண்டேயசரித்திரத்தைக் கூறி 98-ஆவது தசகத்தில் பகவானுக்கு நமஸ்காரத்தைக் கூறி 99-ஆவது தசகத்தில் ருக்வேதமந்திரங்களின் பதங்களும் அர்த்தங்களுமடங்கின சுலோகங்களைக்கொண்டு பகவானை ஸ்துதித்தவுடன் தன் கண்கள் முன் தென்பட்ட திவ்யரூபத்தை 100-ஆவது தசகத்தால் வர்ணிக்கின்றார். இதைப் படித்தால் நம் முன்னிலும் பகவான் நிற்பதாகவே தோன்றும். வர்ணனை அவ்வளவு நன்றாக அமைந்திருக்கிறது.

ஸ்ரீமத் பாகவதம் பக்திப்பிரதானமான ஒரு புராணமாகிலும் அதில் ஸாங்கியம், யோகம், கர்மம், பக்தி, ஞானம், தர்மம் முதலிய அனேக விஷயங்கள் ஸந்தர்ப்பானுசாரமாக அங்கங்கு கூறப்பட்டிருக்கின்றன. முன் சொன்ன விஷயங்களைக் கூறுமிடங்கள் மிகக் கடினமானவையும், பற்பல வியாக்யானங்களைக்கொண்டு அறியவேண்டியவைகளுமாக இருக்கின்றன. அவைகளை பட்டதிரி மிக எளிய நடையில் இனிமையாகக் கூறி நம்போன்ற சிற்றறிவாளர்களை அனுக்கிரஹித்திருக்கின்றார் என்றே கூறவேண்டும். உதாரணமாக கபிலோபாக்கியானத்தை எடுத்துக்கொள்ளுவோம். கபிலோபாக்கியானம் பாகவதத்தில் மூன்றாவது ஸ்கந்தம் 24-ஆவது அத்தியாயம் முதல் 33-ஆவது அத்தியாயம் முடிய 10 அத்தியாயங்களில் கூறப்பட்டிருக்கிறது. இதில் கபிலர் தன் தாயான தேவஹூதிக்கு ஸாங்கியதத்வத்தை

உபதேசிக்கின்றார். அவ்விதம் பத்து அத்யாயங்களில் கூறப்பட்ட தத்வத்தை பட்டதிரி 10 சுலோகங்களால் கூறுகின்றார். அவை மிக எளிய நடையில் சரசமாகவும் சுருக்கமாகவும் விஷயங்களுக்கு குறைவில்லாமலும் பக்தியையூட்டுகின்றனவாகவும் பற்பல உதாஹரணங்களுடனும் கூறப்பட்டிருக்கின்றன என்பது நாராயணீயத்தைப் படிப்போர் எளிதாக அறியமுடியும்.

பட்டதிரி கதையை சுருக்கமாக கூறுவதில் தேர்ச்சிபெற்றவர் என்பதற்கு பாகவதம் ஒன்பதாவது ஸ்கந்தத்தில் இரண்டத்யாயங்களைக்கொண்டு கூறப்பட்ட ஸ்ரீராமாயணகதையை 2 தசகங்களைக்கொண்டு மிக வேகமாகவும், கதாபாகங்களை விடாமலும் சரசமாகவும் கூறியிருப்பதே சிறந்த உதாஹரணமாகும். அதேபோல பதினொன்றாவது ஸ்கந்தத்தில் பகவான் உத்தவருக்குச்செய்த தத்வோபதேசத்தை மிகச் சுருக்கமாக கூறுகின்றார். அதிலும் 25 குருக்களிடமிருந்து அறியவேண்டிய விஷயங்களைக் கூறுமிடத்தில் கவி தன் திறமையை பூராவும் பயன்படுத்தியிருக்கின்றார். பாகவதத்தில் அனேகம் தத்வரத்னங்களுக்கு இருப்பிடமான ஏகாதசஸ்கந்தத்தை மிக எளியபாஷையில் கவி நமக்கு உபதேசித்திருக்கின்றாரென்றே கூறவேண்டும்.

கவிதாகுணங்களான 'யமகம்', 'விருத்தியனுப்பிராசம்' முதலிய சப்தாலங்காரங்களும், உபமை, ரூபகம், அர்த்தாந்தரந்யாசம், சிலேஷை, விரோதாபாசம் முதலிய அர்த்தாலங்காரங்களும், ரௌத்திரம் சிருங்காரம், வீரம், முதலிய ரசங்களும், ரசங்களுக்கனுரூபமான விருத்தங்கள், ரீதிகள் முதலியவைகளும் நாராயணீயத்தில் நன்கமைந்திருக்கின்றன. அவைகளை நரசிம்மாவதாரம், ஸ்ரீகிருஷ்ணலீலை, ராசக்ரீடை, மல்லயுத்தம், கம்ஸவதம் முதலிய இடங்களில் கவனித்தால் நன்கு புலப்படும். மேற்கூறியவைகளில் ஒவ்வொன்றுக்கும் உதாஹரணங்களைக் கூறுவதென்றால் முகவுரை பெருகிவிடுமென்ற பயத்தால் ரசிகர்களை அந்தந்த கட்டங்களைப் பார்த்து ரசிக்கும்படி வேண்டுகின்றோம்.

தவிர 'भक्त्या भागवतं ज्ञेयं' என்ற முதியோர் மொழியை பட்டதிரி தனது நாராயணீயத்தில் நிரூபித்துக் காண்பித்திருக்கிறார். பகவத் பிரசாதத்தைப் பெற சாஸ்திரங்களில் பல உபாயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆகிலும் அவைகளில் எளிதாக அனுஷ்டிக்கமுடிந்தது பக்தியோகம் ஒன்றுதான். எவ்வித மூடனும் பக்தியோகம் ஒன்றைப் பின்பற்றி ஈசுவரானுக்கிரஹத்தைப் பெறமுடியும். கர்மயோகமும் ஞானயோகமும் அவ்விதம் எளிதாக ஸாதாரண ஜனங்களால் மட்டுமல்ல மஹாயோகிகளால்கூட பெறமுடிந்தவையல்ல. பக்தியொன்றுதான் 'सद्यः सिद्धिकरी' என்றும் மற்றவை பல ஜன்மங்களுடைய முடிவில் பயனளித்தாலும் அளிக்கலாம்; அல்லாமலுமிருக்கலாமென்றும் கவி கூறுகின்றார். இந்த தத்வத்தை இரண்டாவது தசகத்திலிருந்து ஆரம்பித்து நடுவில் பல இடங்களிலும் கதை வாயிலாகக் கூறி, 94 முதல் 97 தசகங்களில் உத்தமபக்தியைப் பிரார்த்திக்கிற வியாஜத்தால் வெளியிட்டிருக்கின்றார். ஒரு நூலில் கூறப்படும் தத்வத்தைக் காண

பதற்கு உபக்கிரமம், உபஸம்ஹாரம், மத்தியபராமர்சம் என்று மூன்று காரணங்களை சாஸ்திரகாரர்கள் கூறுகின்றனர். அவைகளைக்கொண்டு கவனித்தாலும் நாராயணீயத்தில் முக்கியமாகக் கூறப்படுவது - பாகவதசித்தாந்தமான பக்திதான் மோக்ஷத்திற்குக் காரணம் என்பது நன்கு புலப்படும். ஆகையால் இது பாகவதத்திலிருக்கும் தத்வங்களையும் சுருக்கமாகவும் சாரமாகவும் கூறுவதால் இதைப் படிப்பவர்கள் பாகவதார்த்தத்தை எளிதில் அறியமுடியுமென்று கூறமுடியும். ஆகையால் நாராயணீயத்திற்கு 'பாகவதஸாரம்' என்ற பெயரும் தகுமென்று சொல்லலாம்.

முன்கூறியபடி ஒரு சாஸ்திரபண்டிதன், அதிலும் வியாகரணசாஸ்திரபண்டிதன் இயற்றியிருக்கும் இந்நாராயணீயத்தில் சாஸ்திரீயங்களான பதங்களும் கற்பனைகளும் அதிகமானதால் அவை எளிதில் அறிவதற்கரிது என்பதை மனதிற்கண்டு இதற்கு ஒரு பதவுரை எழுதி அச்சிட்டால் நாராயணீயத்தின் ஸ்வரூபஞானம் சாதாரண ஜனங்களுக்கு ஏற்படுமென்று மனதில் கருதி அன்வயக்கிரமமாக அர்த்தம் எழுதப்பட்டிருக்கிறது. இதில் அன்வயக்கிரமத்திலோ தமிழுரையிலோ பண்டிதர்களுக்கு அபிப்பிராயபேதங்கள் தோன்றலாம். அவ்விதமான அபிப்பிராயபேதங்களை அறிஞர்கள் காரிய காரணங்களுடன் எடுத்துக்காடினால் அவைகளை இரண்டாவது பதிப்பில் திருத்தியமைக்க முயலுவோமாக. குருவாயூரப்பன் அருளால் இரண்டாவது பதிப்பு நேருமாகில் ஒவ்வொரு சுலோகத்திற்கும் கருத்துரையும் கதையும் விரிவாகக் கூற உத்தேசிக்கப்படுகிறது.

இந்நாராயணீயத்தை இந்த ரூபத்தில் அச்சிடமுயன்று, நம் பிரயத்தினத்தை ஸபலமாகச் செய்த RAMAYANA PUBLISHING HOUSE அதிகாரிகளுக்கும், இதற்கு வேண்டிய *Proof Reading* முதலிய உதவி அளித்தவர்களுக்கும், அச்சிட்ட SCHOLAR PRESS அதிகாரிகளுக்கும், இதில் சம்பந்தப்பட்ட அனைவர்களுக்குமே பட்டதிரி குருவாயூரப்பனிடம் பிரார்த்தித்தபடியே ஆயுராரோக்கியசௌக்கியங்கள், செழிப்புற்றவைகளாக உண்டாகவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு இப்புத்தகத்தை குருவாயூரப்பன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கின்றோம்.

त्वदीयं वस्तु गोविन्द तुभ्यमेव समर्पये।
तेन त्वत्पादकमले रतिर्मेऽस्त्वनपायिनी॥

MELARKODE,
8—2—1954.

இங்ஙனம்,
விதேயன் சோமசுந்தரதீக்ஷிதர்.



ॐ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ श्रीमन्नारायणीयम् ॥



## प्रथमस्कन्धपरिच्छेदः ॥

### प्रथमं दशकम्—முதலாவது தசகம்.

श्रीभगवन्महिमानुवर्णनम्—பகவானுடைய மஹிமையை வர்ணிப்பது.

सान्द्रानन्दावबोधात्मकमनुपमितं कालदेशावधिभ्यां
निर्मुक्तं नित्यमुक्तं निगमशतसहस्रेण निर्भास्यमानम् ।
अस्पष्टं दृष्टमात्रे पुनरुरुपुरुषार्थात्मकं ब्रह्म तत्त्वं
तत्तावद्भाति साक्षाद् गुरुपवनपुरे हन्त भाग्यं जनानाम् ॥ १

| | |
|---|---|
| सान्द्रानन्दावबोधात्मकं | பூர்ணமான ஆனந்தம், ஞானம் இவைகளை ஸ்வரூபமாக உடையதும், |
| तत्त्वं अनुपमितं | பரமார்த்த ஸத்தானதும், உபமானமற்றதும், |
| कालदेशावधिभ्यां | காலத்தினுடையவும் தேசத்தினுடையவும் எல்லைகளால் |
| निर्मुक्तं | கட்டுப்படாததும், |
| निगमशतसहस्रेण | அனேக உபநிஷத்துக்களால் |
| अस्पष्टं निर्भास्यमानं | மறைவாகப் பிரதிபாதனம் பண்ணப்படுவதும், |
| दृष्टमात्रे पुनः | தரிசனம் பண்ணப்பட்டமாத்திரத்திலேயே |
| उरुपुरुषार्थात्मकं | பரமபுருஷார்த்தமான மோக்ஷஸ்வரூபமாவதும், |
| नित्यमुक्तं ब्रह्म | என்றுமே மாயையின் காரியங்களினின்று விடுபட்டதுமான யாதொரு பரப்பிரம்மமுண்டோ, |
| तत् तावत् गुरुपवनपुरे | அதுதான் குருவாயூரில் |
| साक्षात् भाति | பிரத்யக்ஷமாக விளங்குகிறது; |
| जनानां भाग्यं हन्त | இது ஜனங்களுடைய பாக்கியமன்றோ. |

एवं दुर्लभ्यवस्तुन्यपि सुलभतया हस्तलब्धे यदन्यत्
तन्वा वाचा धिया वा भजति बत जनः क्षुद्रतैव स्फुटेयम् ।
एते तावद्वयं तु स्थिरतरमनसा विश्वपीडापहत्यै
निश्शेषात्मानमेनं गुरुपवनपुराधीशमेवाश्रयामः ॥ २

| | |
|---|---|
| एवं दुर्लभ्यवस्तुनि | இவ்வாறு அடையமுடியாத வஸ்துவானது, |
| सुलभतया | முன் சொன்னவிதம் எளிதாக |

| | |
|---|---|
| हस्तलब्धे अपि जनः | கையில் கிடைத்திருந்துங்கூட ஜனங்கள் |
| तन्वा वाचा धिया वा | சரீரத்தாலும், வாக்கிலுலும், மனத்திலுலும் |
| अन्यत् भजति यत् | வேறொரு தெய்வத்தை ஆராதிக்கிறார்கள் என்ற |
| इयं स्फुटा क्षुद्रता एव | இது சுத்த அவிவேகந்தான். |
| बत | கஷ்டம். |
| तु एते वयं तावत् | ஆனால் இதையறிந்த நாங்களோ என்றால் |
| विश्वपीडापहत्यै | எல்லோருடைய துக்கங்களையும் போக்குவதற்காக |
| स्थिरतरमनसा | ஒரே நிலைபெற்ற மனத்துடன் |
| निश्शेषात्मानं | ஸமஸ்த சராசரங்களுக்கும் அந்தராத்மாவான |
| एनं गुरुपवनपुराधीशं एव | இந்த குருவாயூரப்பனையே |
| आश्रयामः | ஆசிரயிக்கின்றோம். |

सत्वं यत्तत्पराभ्यामपरिकलनतो निर्मलं तेन तावत्
भूतैर्भूतेन्द्रियैस्ते वपुरिति बहुशः श्रूयते व्यासवाक्यम् ।
तत्स्वच्छत्वाद्यदच्छादितपरसुखचिद्गर्भनिर्भासरूपं
तस्मिन्धन्या रमन्ते श्रुतिमतिमधुरे सुग्रहे विग्रहे ते ॥ २

| | |
|---|---|
| पराभ्यां | ரஜஸ்தமோகுணங்களுடன் |
| अपरिकलनतः | ஒன்றுசேராததால் |
| निर्मलं तत् | மிகப் பரிசுத்தமும் பிரசித்திபெற்றதுமான |
| यत् सत्वं तेन तावत् | யாதொரு ஸத்வகுணமுண்டோ அதைக்கொண்டே |
| भूतैः भूतेन्द्रियैः | மஹதாதிக்கிரமமாக உண்டான பஞ்சமஹாபூதங்களைக் கொண்டும் ஏகாதசேந்திரியங்களைக்கொண்டும் |
| ते वपुः | தங்கள் சரீரம் (தன்னிஷ்டப்படி செய்யப்பட்டது) |
| इति व्यासवाक्यं | என்ற வ்யாஸமுனியுடைய வசனம் |
| बहुशः श्रूयते | அடிக்கடி புராணங்களில் கேட்கப்படுகிறது. |
| स्वच्छत्वात् | மிகப் பரிசுத்தமாயிருப்பதால் |
| अच्छादितपरसुख-चिद्गर्भनिर्भासरूपं | மறைக்கப்படாத பரமானந்தத்தையும் ஞானத்தையும் கர்ப்பத்திலுடையதும், அதனால் பிரகாசரூபமாயுமி [ருக்கிற |
| यत् तत् | யாதொரு அந்த லீலாவிக்கிரஹமுண்டோ, |
| तस्मिन् | அப்படிப்பட்ட |
| श्रुतिमतिमधुरे | காதிற்கும் மனதிற்கும் இன்பமானதும், |
| सुग्रहे | சுகமாக கிரஹிக்கக்கூடியதுமான |
| ते विग्रहे | தங்களுடைய லீலாவிக்கிரகத்தில் |
| धन्याः रमन्ते | பாக்கியசாலிகள் மகிழ்கிறார்கள். |

निष्कम्पे नित्यपूर्णे निरवधिपरमानन्दपीयूषरूपे
निर्लीनानेकमुक्तावलिसुभगतमे निर्मलब्रह्मसिन्धौ ।

कल्लोलोल्लासतुल्यं खलु विमलतरं सत्त्वमाहुस्तदात्मा
कस्मान्नो निष्कलस्त्वं सकल इति वचस्त्वत्कलास्वेव भूमन्! ॥ ४

| | |
|---|---|
| निष्कम्पे | விகாரமற்றதும் (கலக்கமுடியாமல் கம்பீரமானதும்), |
| नित्यपूर्णे | நித்யமும் பூர்ணமும் (எப்பொழுதும் நிறைந்ததும்), |
| निरवधिपरमानन्द-पीयूषरूपे | காலதேசவரையறைகளில்லாத பரமானந்தமாகிற அமிருதஸ்வரூபமும் (அளவற்ற ஆனந்தத்தரும் அமிருதத்தின் உற்பத்திக்குக் காரணமானதும்) |
| निर्लीनानेकमुक्तावलिसुभगतमे | தன்னிடத்தில் லயித்திருக்கும் அனேகம் முக்தர்களால் மிக மனோஹரமானதும் (தன்னிடத்தில் ஒளிந்திருக்கும் முத்துக்குவியல்களால் அழகானதும்), |
| निर्मलब्रह्मसिन्धौ | நிர்மலமுமான பிரம்ம ஸமுத்திரத்தில் |
| विमलतरं सत्त्वं | மிகப் பரிசுத்தமான ஸத்வகுணமானது |
| कल्लोलोल्लासतुल्यं | பெரிய அலைகளுக்குச்சமம் |
| खलु आहुः | என்றல்லவா ஆசாரியர்கள் சொல்லுகிறார்கள். |
| तदात्मा त्वं | அப்படிப்பட்ட சுத்த ஸத்வஸ்வரூபியாகிய தாங்கள் |
| कस्मात् नो निष्कलः | நிஷ்கலப்பிரம்மம் அல்ல என்பது எங்ஙனம்? |
| भूमन्! | ஹே! பரிபூர்ணஸ்வரூபியே! |
| सकलः इति वचः | (தங்களை) ஸகலன் என்று சொல்லும் வசனமானது |
| त्वत्कलासु एव | தங்களுடைய அம்சாவதாரங்களில்மட்டுந்தான் (பொருந்தும்). |

निर्व्यापारोऽपि निष्कारणमज! भजसे यत् क्रियामीक्षणाख्यां
तेनैवोदेति लीना प्रकृतिरसतिकल्पाऽपि कल्पादिकाले ।
तस्याः संशुद्धमंशं कमपि तमतिरोधायकं सत्त्वरूपं
स त्वं धृत्वा दधासि स्वमहिमविभवाकुण्ठ! वैकुण्ठ! रूपम् ॥ ५

| | |
|---|---|
| अज | ஜனனமற்ற விஷ்ணுவே! |
| निर्व्यापारः अपि | செயலற்றவராக இருந்தாலுங்கூட |
| निष्कारणं | காரணமில்லாமல் |
| ईक्षणाख्यां | பார்வை (மாயையை ஏவுவது) என்று பெயருடைய |
| क्रियां भजसे यत् | செயலைச் செய்கிறீர் என்ற யாதொன்றுண்டோ, |
| तेन एव लीना | அதைக்கொண்டே தங்களிடத்தில் லயித்திருந்ததும் |
| असतिकल्पा अपि | இல்லாதது போலிருந்ததுமான |
| प्रकृतिः, कल्पादिकाले | மாயை, ஸ்ருஷ்டியின் ஆரம்பகாலத்தில் |
| उदेति | மீளவும் வெளிப்படுகிறது. |
| स्वमहिमविभवाकुण्ठ वैकुण्ठ | தனது யோகமஹிமையின் வைபவத்தால் தடங்கலில்லாத சிச்சக்தியுடைய வைகுண்டவாஸியே! |

स: त्वं — அவ்விதம் மாயையை ஏவுகின்ற தாங்கள்
संशुद्धं — (ரஜஸ்தமோகுணங்கள் கலக்காததால்) மிகப் பரிசுத்த
अतिरोधायकं — அதனால் ஒன்றையும் மறைக்காததும் [மானதும்,
सत्वरूपं तस्याः — ஸத்வவடிவானதுமான அந்த மாயையின்
कमपि तं अंशं — இன்னதென்று சொல்லமுடியாத ஒரு அம்சத்தை
धृत्वा रूपं दधासि — எடுத்துக்கொண்டு லீலாவிக்ரஹத்தைத் தரிக்கிறீர்.

तत्ते प्रत्यग्रधाराधरललितकलायावलीकेलिकारं
लावण्यस्यैकसारं सुकृतिजनदृशां पूर्णपुण्यावतारम् ।
लक्ष्मीनिश्शङ्कलीलानिलयनममृतस्यन्दसन्दोहमन्तः
सिञ्चत्सञ्चिन्तकानां वपुरनुकलये मारुतागारनाथ! ॥ ६

मारुतागारनाथ! — ஹே! குருவாயூரப்பா!
प्रत्यग्रधाराधरललित- कलायावलीकेलिकारं — நீருண்ட மேகம்போலழகானதும், காயாம்பூக் கொத்துப்போல் மகிழ்ச்சியளிப்பதும்,
लावण्यस्य एकसारं — அழகின் ஒன்றுபட்ட திரட்சியும்,
सुकृतिजनदृशां — புண்யவான்களுடைய கண்களுக்கு
पूर्णपुण्यावतारं — புண்யங்களின் பூர்ணவதாரரூபமானதும்,
लक्ष्मीनिःशङ्कलीला- निलयनं — லக்ஷ்மீதேவிக்குச் சங்கையில்லாமல் லீலைசெய்வதற்கு இடமாயிருப்பதும்,
सञ्चिन्तकानां अन्तः — தன்னை தியானஞ்செய்கிறவர்களுடைய ஹிருதயத்தில்
अमृतस्यन्दसन्दोहं — பிரம்மானந்தமாகிற அமிருதப்பெருக்கின் தாரையை
सिञ्चत् तत् — வருஷிக்கின்றதும், மிகப் பிரசித்தமானதுமான
ते वपुः अनुकलये — தங்கள் திருமேனியை இடைவிடாது நினைக்கின்றேன்.

कष्टा ते सृष्टिचेष्टा बहुतरभवखेदावहा जीवभाजा-
मित्येवं पूर्वमालोचितमजित! मया नैवमद्याभिजाने ।
नो चेज्जीवाः कथं वा मधुरतरमिदं त्वद्वपुश्चिद्रसार्द्रं
नेत्रैः श्रोत्रैश्च पीत्वा परमरससुधांभोधिपूरे रमेरन् ॥ ७

अजित! — மாயையால் ஜயிக்கப்படாத கிருஷ்ண !
जीवभाजां — ஜீவர்களுக்கு
बहुतरभवखेदावहा — பலவகையான பிறவி (ஸம்ஸார) துக்கத்தைக் கொடுக்
ते सृष्टिचेष्टा — தங்களுடைய ஸ்ருஷ்டியாகிற செய்கை [கின்றதான
कष्टा इति एवं — மிகவும் கொடுமை என்றே
मया पूर्वं आलोचितं — அறிவில்லாத என்னால் முன்பு எண்ணப்பட்டது;
अद्य एवं न अभिजाने — இப்பொழுது அவ்விதம் எண்ணவில்லை.

| | |
|---|---|
| नो चेत् जीवाः | தாங்கள் அவ்விதம் ஸ்ருஷ்டிக்காவிடில் ஜீவர்கள் |
| चिद्रसार्द्रं | சிதானந்தத்தால் உள்ளும் வெளியும் நிறைந்ததும், |
| मधुरतरं इदं त्वद्वपुः | மிக மதுரமானதுமான இந்தத் தங்கள் திருமேனியை |
| नेत्रैः श्रोत्रैः च | கண்களைக்கொண்டும் காதுகளைக்கொண்டும் |
| पीत्वा | பானஞ்செய்து |
| परमरससुधांभोधिपूरे | பரமானந்தமாகிற அமிருதக்கடலின் பிரவாகத்தில் |
| कथं वा रमेरन् | எவ்விதம் விளையாடுவார்கள்? |

नम्राणां सन्निधत्ते सततमपि पुरस्तैरनभ्यर्थितान-
प्यर्थान् कामानजस्रं वितरति परमानन्दसान्द्रां गतिं च ।
इत्थं निश्शेषलभ्यो निरवधिकफलः पारिजातो हरे! त्वं
क्षुद्रं तं शक्रवाटीद्रुममभिलषति व्यर्थमर्थिव्रजोऽयम् ॥ ८

| | |
|---|---|
| हरे! | ஹே! ஸ்ரீகிருஷ்ண! |
| निःशेषलभ्यः | ஸமஸ்த ஜனங்களாலும் அடையக்கூடியதும் |
| निरवधिकफलः | எல்லையற்ற மோக்ஷமாகிற பலத்தையுடையதுமான |
| त्वं पारिजातः नम्राणां पुरः | தாங்களாகிற பாரிஜாதம் நமஸ்கரித்தவர்களுடைய முன்னிலையில் |
| सततं अपि सन्निधत्ते | எப்பொழுதும் பிரத்யக்ஷமாகிறது. |
| तैः | அவர்களால் |
| अनभ्यर्थितान् अपि | பிரார்த்திக்கப்படாதவைகளாக இருந்தபோதிலுங்கூட |
| कामान् अर्थान् | அபீஷ்டங்களான புருஷார்த்தங்களையும் |
| परमानन्दसान्द्रां गतिं च | பிரம்மானந்தம் நிறைந்த மோக்ஷத்தையும் |
| अजस्रं वितरति | எப்பொழுதும் கொடுக்கிறது. |
| इत्थं | இப்படி இருக்கும்பொழுது |
| अयं अर्थिव्रजः | இந்த யாசகர்களுடைய கூட்டம் |
| क्षुद्रं | உபயோகமற்ற பலங்களைக் கொடுக்கிற |
| तं शक्रवाटीद्रुमं | அந்த இந்திரனுடைய உத்யானத்திலிருக்கும் கல்பக [விருக்ஷத்தை |
| व्यर्थं अभिलषति | வீணில் விரும்புகிறது. |

कारुण्यात्काममन्यं ददति खलु परे स्वात्मदस्त्वं विशेषा-
दैश्वर्यादीशतेऽन्ये जगति परजने स्वात्मनोऽपीश्वरस्त्वम् ।
त्वय्युच्चैरारमन्ति प्रतिपदमधुरे चेतनाः स्फीतभाग्या-
स्त्वं चात्माराम एवेत्यतुलगुणगणाधार! शौरे! नमस्ते ॥ ९

| | |
|---|---|
| परे | பிரம்மா முதலிய மற்ற தேவர்கள் |
| कारुण्यात् अन्यं | கருணையால் மோக்ஷத்தைத்தவிர மற்ற |

कामं खलु ददति — இஷ்டமான வரத்தை மட்டும் கொடுக்கிறார்கள்.
त्वं विशेषात् — தாங்களோவென்றால் கருணாவிசேஷத்தால்
स्वात्मदः — ஸ்வஸ்வரூபமான மோக்ஷத்தையே கொடுக்கின்றீர்.
अन्ये ऐश्वर्यात् — மற்றுள்ளவர்கள் அஷ்டைசுவரியத்தைக்கொண்டு
जगति परजने — இவ்வுலகில் மற்ற ஜனங்களிடத்தில் மட்டும்
ईशते — நிக்கிரஹானுக்கிரஹ சக்தியுடையவர்களாகிறார்கள்.
त्वं — தாங்களோ என்றால்
स्वात्मनः अपि — தங்களுக்குங்கூட (ஸ்வஸ்வரூபமாகிற ஜீவர்களுக்கும்)
ईश्वरः — நிக்கிரஹானுக்கிரஹ சக்தியுடையவர்.
स्फीतभाग्याः चेतनाः — அதிக பாக்கியமுடையவர்களான ஜீவர்கள்
प्रतिपदमधुरे — பக்கத்தில் வரவர ஆனந்தத்தைக் கொடுக்கின்ற
त्वयि उच्चैः आरमन्ति — தங்களிடத்தில் அதிகமாக ஆனந்தமடைகிறார்கள்.
त्वं च आत्मारामः एव — தாங்களோ எனில் தங்களிடமே ரமிக்கின்றீர்.
इति — இவ்விதம்
अतुलगुणगणाधार! — உவமையில்லாத குணகணங்களுக்கு இருப்பிடமான
शौरे! — சூரவம்சத்தில் ஜனித்த கிருஷ்ணா!
ते नमः — தங்களுக்கு நமஸ்காரம்.

ऐश्वर्यं शङ्करादीश्वरविनियमनं विश्वतेजोहराणां
तेजस्संहारि वीर्यं विमलमपि यशो निस्पृहैश्चोपगीतम् ।
अङ्गासङ्गा सदा श्रीरखिलविदसि न क्वापि ते सङ्गवार्ता
तद्वातागारवासिन्! मुरहर! भगवच्छब्दमुख्याश्रयोऽसि ॥ १०

मुरहर! — முரனைக்கொன்ற
वातागारवासिन्! — குருவாயூரில் வசிக்கும் ஸ்ரீகிருஷ்ணா!
ते ऐश्वर्यं — தங்களுடைய ஐசுவரியம் (ஈசுவரத்தன்மையானது)
शङ्करादीश्वरविनियमनं — சங்கரன் முதலிய ஈசுவரர்களையுங்கூட அவரவர்களுடைய அதிகாரத்தில் இருக்கச்செய்கின்றது.
ते वीर्यं — தங்களுடைய வீரியம்
विश्वतेजोहराणां — எல்லோருடைய பராக்கிரமத்தையும் அபஹரிக்கின்ற சங்கராதிகளுடைய
तेजःसंहारि — பராக்கிரமத்தையும் ஸம்ஹாரஞ்செய்வதாக இருக்கிறது.
विमलं यशः अपि — மிகப் பரிசுத்தமான உமது கீர்த்தியுங்கூட
निःस्पृहैः च — ஒன்றிலுமாசையில்லாத முக்தர்களாலுங்கூட
उपगीतं — கானம்பண்ணப்பட்டிருக்கிறது.
श्रीः सदा — லக்ஷ்மீதேவி எப்பொழுதும்
अङ्गासङ्गा — தங்கள் சரீரத்திலேயே குடிகொண்டிருக்கிறாள்.
त्वं अखिलवित् असि — தாங்கள் எல்லாவற்றையுமறிந்தவராக இருக்கின்றீர்.

| | |
|---|---|
| क अपि | ஓரிடத்திலும் |
| सङ्गवार्ता न | தங்களுக்குப் பற்றுதல் என்ற பேச்சே இல்லை. |
| तत् | இவ்வாறு ஐசுவரியம், யசஸ், ஸ்ரீ, வீரியம், ஞானம், அஸங்கம் என்ற ஆறு குணங்களும் பொருந்தியிருப்பதால் |
| भगवच्छब्दमुख्याश्रयः असि | பகவான் என்ற சொல்லுக்கு முக்கியப் பொருள் ஆகின்றீர். |

इति श्रीमन्नारायणीये भगवन्महिमानुवर्णनं नाम प्रथमं दशकं समाप्तम् ॥ १ ॥



## द्वितीयं दशकम्—இரண்டாவது தசகம்.

भगवद्रूपवर्णनम्—பகவானுடைய ரூபத்தை வர்ணிப்பது.

सूर्यस्पर्धिकिरीटमूर्ध्वतिलकप्रोद्भासिफालान्तरं
कारुण्याकुलनेत्रमार्द्रहसितोल्लासं सुनासापुटम् ।
गण्डोद्यन्मकराभकुण्डलयुगं कण्ठोज्ज्वलत्कौस्तुभं
त्वद्रूपं वनमाल्यहारपटलश्रीवत्सदीप्रं भजे ॥ १

| | |
|---|---|
| सूर्यस्पर्धिकिरीटं | ஸூரியனுக்கு நிகரான கிரீடத்தையுடையதும், |
| ऊर्ध्वतिलकप्रोद्भासिफालान्तरं | திலகத்தால் மிகவும் பிரகாசிக்கின்ற நெற்றியையுடையதும், |
| कारुण्याकुलनेत्रं | கருணை நிறைந்த கண்களையுடையதும், |
| आर्द्रहसितोल्लासं | கனிந்த புன்னகையால் விளங்கும் |
| सुनासापुटं | அழகான மூக்கையுடையதும், |
| गण्डोद्यन्मकराभकुण्डलयुगं | கன்னப்பிரதேசங்களில் பிரகாசிக்கின்ற இரண்டு மகரகுண்டலங்களையுடையதும், |
| कण्ठोज्ज्वलत्कौस्तुभं | கழுத்தில் சோபிக்கின்ற கௌஸ்துப மணியையுடையதும், |
| वनमाल्यहारपटलश्रीवत्सदीप्रं | வனமாலை, முத்துமாலைகள், ஸ்ரீவத்ஸம் இவைகளால் விளங்குவதுமான |
| त्वद्रूपं भजे | தங்களுடைய ரூபத்தை நான் சேவிக்கின்றேன். |

केयूराङ्गदकङ्कणोत्तममहारत्नाङ्गुलीयाङ्कित-
श्रीमद्बाहुचतुष्कसङ्गतगदाशङ्खारिपङ्केरुहाम् ।

कांचित् काञ्चनकाञ्चिलाञ्छितलसत्पीतांबरालम्बिनी-
मालम्बे विमलाम्बुजद्युतिपदां मूर्तिं तवार्तिच्छिदम् ॥ २

| | |
|---|---|
| केयूराङ्गदकङ्कणोत्तम-महारत्नाङ्गुलीयाङ्कितश्रीमद्बाहुचतुष्कसङ्गतगदाशङ्खारिपङ्केरुहां | தோள் வளைகள், அதனடியிலிருக்கும் கைக்கட்டு வளைகள், மணிக்கட்டிலிருக்கும் வளைகள், சிறந்த பெரிய ரத்னங்கள் பதித்த மோதிரங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளும், காந்திபொருந்தியவைகளுமான நான்கு கைகளில் இருக்கின்ற கதை, சங்கு, சக்கரம், தாமரைப்பூ இவைகளையுடையதும், |
| काञ्चनकाञ्चिलाञ्छितलसत्पीतांबरालंबिनीं | தங்க அரைநாணால் அலங்கரிக்கப்பட்டு அதனால் பிரகாசிக்கின்ற பீதாம்பரத்தை தரிக்கின்றதும்; |
| विमलांबुजद्युतिपदां | நிர்மலமான தாமரைப்பூபோன்ற காந்தியுடைய திருப்பாதங்களையுடையதும், |
| आर्तिच्छिदं | துக்கங்களைப் போக்கடிக்கின்றதுமான |
| काञ्चित् | இவ்விதமென்று வர்ணிக்கமுடியாத |
| तव मूर्तिं आलंबे | தங்கள் திருமேனியை நான் ஆசிரயிக்கின்றேன். |

यत्त्रैलोक्यमहीयसोऽपि महितं सम्मोहनं मोहनात्
कान्तं कान्तिनिधानतोऽपि मधुरं माधुर्यधुर्यादपि ।
सौन्दर्योत्तरतोऽपि सुन्दरतरं त्वद्रूपमाश्चर्यतोऽ-
प्याश्चर्यं भुवने न कस्य कुतुकं पुष्णाति विष्णो विभो ॥ ३

| | |
|---|---|
| यत् त्रैलोक्यमहीयसः अपि | யாதொன்று மூன்றுலகங்களிலும் மிக மேன்மையுற்று பூஜிக்கப்பட்ட பதார்த்தத்தைக்காட்டிலும் |
| महितं | மேன்மையுற்று பூஜிக்கப்பட்டதோ; |
| मोहनात् | மனதைக்கவரக்கூடிய வஸ்துவைக்காட்டிலும் |
| संमोहनं | மனதை நன்கு கவரக்கூடியதோ; |
| कान्तिनिधानतः अपि | காந்திக்கிருப்பிடமான வஸ்துவைக்காட்டிலும் |
| कान्तं | மிகக் காந்தியுற்றதோ; |
| माधुर्यधुर्यात् अपि | இன்பத்தைக் கொடுக்கின்ற வஸ்துவைக்காட்டிலும் |
| मधुरं | அதிகம் இன்பத்தைக் கொடுப்பதோ; |
| सौन्दर्योत्तरतः अपि | அழகினால் மிகச் சிறந்த வஸ்துவைக்காட்டிலும் |
| सुन्दरतरं | மிக அழகுற்றதோ; |
| आश्चर्यतः अपि आश्चर्यं | ஆச்சரியமானதைக்காட்டிலும் ஆச்சரியமானதோ; |
| विष्णो विभो | எங்கும் நிறைந்திருக்கும் ஹே! ஸர்வேச்வர! |
| तत् त्वद्रूपं | அப்படிப்பட்ட தங்கள் திருமேனி |
| भुवने कस्य कुतुकं | இவ்வுலகத்தில் யாருக்குத்தான் கௌதுகத்தை |
| न पुष्णाति | விருத்திசெய்கிறதில்லை. |

तत्तादृङ्मधुरात्मकं तव वपुस्संप्राप्य संपन्मयी
सा देवी परमोत्सुका चिरतरं नास्ते स्वभक्तेष्वपि ।
तेनास्या बत कष्टमच्युत! विभो! त्वद्रूपमानोज्ञक-
प्रेमस्थैर्यमयादचापलबलाच्चापल्यवार्तोदभूत् ॥ ४

| | |
|---|---|
| सम्पन्मयी सा देवी | தனதான்யரூபிணியான அந்த லக்ஷ்மீதேவியானவள் |
| तत्तादृङ्मधुरात्मकं | ஒன்றுடனும் உவமையற்ற மனோஹரமான உருவமு |
| तव वपुः संप्राप्य | தங்கள் திருமேனியை ஆசிரயமாக அடைந்து [டைய |
| परमोत्सुका | மிகவும் பற்றுதலுடையவ்ளாய் |
| स्वभक्तेषु अपि | தன் பக்தர்களிடத்திலுங்கூட |
| चिरतरं न आस्ते | வெகுகாலம் இருப்பதில்லை. |
| अच्युत! विभो! | ஆசிரயித்தவர்களைக் கைவிடாத பிரபுவே! |
| तेन अस्याः | அந்தக் காரணத்தைக்கொண்டு இந்த லக்ஷ்மீதேவிக்கு |
| त्वद्रूपमानोज्ञक- प्रेमस्थैर्यमयात् | தங்கள் திருவுருவத்தின் அழகிலிருக்கும் பிரேமையில் நிலைபெற்றிருப்பதாகிற |
| अचापलबलात् | சாபல்யமில்லாமலிருப்பதின் பலத்திலிருந்தே |
| चापल्यवार्ता उदभूत् | நிலையற்றவள் என்ற அபகீர்த்தி உண்டாயிருக்கிறது. |
| बत कष्टम् | அது மிக வருந்தத்தக்கதே. |

लक्ष्मीस्तावकरामणीयकहृतैवेयं परेष्वस्थिरे-
त्यस्मिन्नन्यदपि प्रमाणमधुना वक्ष्यामि लक्ष्मीपते! ।
ये त्वद्ध्यानगुणानुकीर्तनरसासक्ता हि भक्ता जना-
स्तेष्वेषा वसति स्थिरैव दयितप्रस्तावदत्तादरा ॥ ५

| | |
|---|---|
| लक्ष्मीपते इयं लक्ष्मीः | ஹே லக்ஷ்மீகாந்த! இந்த லக்ஷ்மீதேவி |
| तावकरामणीयकहृता एव | தங்களது ரூபலாவண்யத்தால் வசியம்பண்ணப் பட்டவளாதலால் |
| परेषु अस्थिरा | மற்றவர்களிடத்தில் நிலைபெறாதிருக்கிறாள் |
| इति अस्मिन् | என்ற விஷயத்தில் |
| अन्यत् प्रमाणं अपि | வேறொரு அனுமானப்பிரமாணத்தைக்கூட |
| अधुना वक्ष्यामि | இப்பொழுது உரைக்கிறேன். |
| ये भक्ताः जनाः | எந்த பக்தஜனங்கள் |
| त्वद्ध्यानगुणानु- कीर्तनरसासक्ताः | தங்களைத் தியானிப்பதிலும் தங்கள் குணங்களைக் கீர்த்தனஞ்செய்வதிலுமிருக்கும் ஆனந்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்களோ, |
| तेषु एषा | அந்த பக்தஜனங்களிடத்தில் இந்த லக்ஷ்மீதேவி |
| दयितप्रस्तावदत्तादरा | தன் கணவனைப்பற்றிய பேச்சில் ஆதரவுடன் கூடியவ [ளாய் |
| स्थिरा एव वसति हि | ஸ்திரமாகவே வசிக்கின்றாளல்லவா? |

भक्त्युत्पत्तिवर्णनम् ॥

एवंभूतमनोज्ञतानवसुधानिष्यन्दसन्दोहनं
त्वद्रूपं परचिद्रसायनमयं चेतोहरं शृण्वताम् ।
सद्यः प्रेरयते मतिं मदयते रोमाञ्चयत्यङ्गकं
व्यासिञ्चत्यपि शीतबाष्पविसरैरानन्दमूर्च्छोद्भवैः । ६

| | |
|---|---|
| एवंभूतमनोज्ञतानव- सुधानिष्यन्दसन्दोहनं | இவ்விதம் முன்சொன்னவிதமான ஸௌபாக்கியமாகிற (அழகாகிற) புது அமிருததாரையைப் பெருக்கு [கின்றதும், |
| परचिद्रसायनमयं | பரப்பிரம்மஸ்வரூபமானதும், |
| चेतोहरं त्वद्रूपं | மனோஹரமுமான தங்கள் திருவுருவத்தைப்பற்றி |
| शृण्वतां मतिं सद्यः | கேட்கின்றவர்களுடைய புத்தியைக் கேட்ட உடனேயே |
| प्रेरयते | மறுபடியும் கேட்பதற்காகத் தன் வசப்படுத்திக் [கொள்ளுகிறது. |
| मदयते | ஆனந்தபரவசமாக்குகிறது. |
| अङ्गकं रोमाञ्चयति | சரீரத்தை மயிர்க்கூச்செறியும்படி செய்கிறது. |
| आनन्दमूर्च्छोद्भवैः | ஆனந்தப்பெருக்கிலிருந்துண்டான |
| शीतबाष्पविसरैः | குளிர்ந்த கண்ணீர்ப் பெருக்குகளால் |
| व्यासिञ्चति अपि | நனைக்கவுஞ்செய்கிறது. |

एवंभूततया हि भक्त्यभिहितो योगः स योगद्वयात्
कर्मज्ञानमयाद् भृशोत्तमतरो योगीश्वरैर्गीयते ।
सौन्दर्यैकरसात्मके त्वयि खलु प्रेमप्रकर्षात्मिका
भक्तिर्निःश्रममेव विश्वपुरुषैर्लभ्या रमावल्लभ ! ॥ ७

| | |
|---|---|
| भक्त्यभिहितः | பக்தியென்று சொல்லப்பட்ட |
| सः योगः | அந்தப் பிரஸித்தமான மோக்ஷோபாயமானது |
| एवंभूततया हि | இப்படிப் பெருமைவாய்ந்து இருப்பதாலல்லவா |
| कर्मज्ञानमयात् | கர்மயோகம் ஞானயோகம் என்ற |
| योगद्वयात् | இருவகைப்பட்ட யோகங்களைக்காட்டிலும் |
| भृशोत्तमतरः | மிகவும் மேன்மைபெற்றதென்று |
| योगीश्वरैः गीयते | வியாஸர் முதலிய யோகீசுவரர்களால் புகழப்படுகிறது. |
| रमावल्लभ ! | ஹே லக்ஷ்மீகாந்த ! |
| सौन्दर्यैकरसात्मके | ஸௌந்தரியமாகிற பிரதான ரஸஸ்வரூபமான |
| त्वयि प्रेमप्रकर्षात्मिका | தங்களிடத்தில் பிரேமையின் எல்லையாகிற |
| भक्तिः विश्वपुरुषैः | பக்தியானது எல்லா ஜனங்களாலும் |
| निःश्रमं एव लभ्या खलु | சிரமமில்லாமலே அடையக்கூடியதல்லவா ? |

निष्कामं नियतस्वधर्मचरणं यत् कर्मयोगाभिधं
तद्दूरेत्यफलं यदौपनिषदज्ञानोपलभ्यं पुनः ।
तत्त्वव्यक्ततया सुदुर्गमतरं चित्तस्य तस्माद्विभो
त्वत्प्रेमात्मकभक्तिरेव सततं स्वादीयसी श्रेयसी ॥ ८

| | |
|---|---|
| कर्मयोगाभिधं | கர்மயோகம் என்று பெயரையுடைய |
| निष्कामं | பயனில் விருப்பமில்லாமல் |
| नियतस्वधर्मचरणं यत् | நித்யம் நைமித்திகம் முதலிய ஸ்வதர்மங்களையனுஷ்டி த்தல் என்று யாதொன்றுண்டோ |
| तत् दूरेत्यफलं | அது நாளடைவில் பயனைக்கொடுப்பதாக இருக்கிறது. |
| औपनिषदज्ञानोपलभ्यं | வேதாந்தஞானத்தாலடையக்கூடிய |
| यत् तत् तु पुनः | யாதொரு மோக்ஷரூபபலமுண்டோ அதோ என்றால் |
| अव्यक्ततया | இந்திரியங்களுக்கு விஷயமல்லாததால் |
| चित्तस्य सुदुर्गमतरं | மனதிற்கு எட்டவேமுடியாததாக இருக்கிறது. |
| विभो! तस्मात् | ஹே பிரபுவே! ஆகையால் |
| त्वत्प्रेमात्मकभक्तिः एव | தங்களிடத்தில் வைக்கப்படும் பிரேமைவடிவமான பக்தி [யொன்றே |
| सततं स्वादीयसी | எப்பொழுதும் மிகவும் ருசியானதும் |
| श्रेयसी | எல்லோராலும் புகழத்தகுந்ததாகவுமிருக்கிறது. |

अत्यायासकराणि कर्मपटलान्याचर्य निर्यन्मलाः
बोधे भक्तिपथेऽथवाऽप्युचिततामायान्ति किं तावता ।
क्लिष्टा तर्कपथे परं तव वपुर्ब्रह्माख्यमन्ये पुन-
श्चित्तार्द्रत्वमृते विचिन्त्य बहुभिः सिध्यन्ति जन्मान्तरैः ॥ ९

| | |
|---|---|
| अत्यायासकराणि | மிகவும் சிரமத்தைச்செய்கின்ற |
| कर्मपटलानि आचर्य | நித்யநைமித்திகாதி கர்மஸமூஹங்களை அனுஷ்டித்து |
| निर्यन्मलाः | அதன்மூலம் மனோமலம் நீங்கியவர்களாய் |
| बोधे | ஞானயோகத்திலாவது |
| अथवा भक्तिपथे अपि | அல்லது பக்திமார்க்கத்திலாவது |
| उचिततां आयान्ति | அதிகாரத்தைப் பெறுகிறார்கள். |
| तावता किं | அதனால் என்ன பிரயோஜனம்? |
| अन्ये पुनः चित्तार्द्रत्वं ऋते | வேறுசிலரோ என்றால் உள்ளம் நெகிழாமல் |
| तर्कपथे परं क्लिष्टा | வேதாந்தசாஸ்திரத்தில் மிகவும் கிலேசத்தையடைந்து |
| ब्रह्माख्यं | "பிரம்மம்" என்ற பெயருடைய |
| तव वपुः विचिन्त्य | உமது ஸ்வரூபத்தை தியானம்பண்ணி |
| बहुभिः जन्मान्तरैः | அனேகம் ஜன்மங்களைக்கொண்டு |
| सिद्ध्यन्ति | மோக்ஷஸித்தியையடைகிறார்கள். |

त्वद्भक्तिस्तु कथारसामृतझरीनिर्मज्जनेन स्वयं
सिद्ध्यन्ती विमलप्रबोधपदवीमक्लेशतस्तन्वती ।
सद्यः सिद्धिकरी जयत्ययि! विभो! सैवास्तु मे त्वत्पद-
प्रेमप्रौढिरसार्द्रता द्रुततरं वातालयाधीश्वर! ॥ १०

| | |
|---|---|
| अयि! विभो! | ஹே பிரபுவே! |
| त्वद्भक्तिः तु | தங்களிடம் வைக்கப்படும் பக்தியோ என்றால் |
| कथारसामृतझरी-निर्मज्जनेन | கதையிலிருக்கும் ரஸமாகிற அமிருதப்பிரவாஹத்தில் அடிக்கடி முழுகுவதால் |
| स्वयं सिद्ध्यन्ती | தானாகவே ஸித்திக்கிறதாகவும், |
| विमलप्रबोधपदवीं | நிர்மலமான பிரம்மஞானமார்க்கத்தை |
| अक्लेशतः तन्वती | சிரமமில்லாமலே செய்வதாகவும், |
| सद्यः सिद्धिकरी | இந்த ஜன்மத்திலேயே ஸித்தியை அளிப்பதாகவும் |
| जयति | மேன்மைபெற்று விளங்குகிறது. |
| वातालयाधीश्वर! | ஹே குருவயூரப்பா! |
| सा त्वत्पदप्रेमप्रौढि-रसार्द्रता एव | அப்படிப்பட்ட தங்கள் திருப்பாதங்களில் பிரேமாதிசயமாகிற ரஸத்தினால் கனிந்திருக்கும் தன்மையாகிற |
| मे द्रुततरं अस्तु | எனக்கு சீக்கிரமாக உண்டாகட்டும். [பக்தியே |

इति श्रीमन्नारायणीये भगवद्रूपवर्णनं भक्त्युत्पत्तिवर्णनं चेति द्वितीयं दशकम् ॥ २ ॥

आदितः श्लोकाः 20.  प्रथमस्कन्धे श्लोकाः 20

## तृतीयं दशकम्—மூன்றாவது தசகம்.

भक्तस्वरूपवर्णनम्—பக்தஸ்வரூபத்தை வர்ணிப்பது.

पठन्तो नामानि प्रमदभरसिन्धौ निपतिताः
स्मरन्तो रूपं ते वरद! कथयन्तो गुणकथाः ।
चरन्तो ये भक्तास्त्वयि खलु रमन्ते परममू-
नहं धन्यान्मन्ये समधिगतसर्वाभिलषितान् ॥ १

| | |
|---|---|
| वरद ते नामानि | ஹே வரதா! தங்கள் திருநாமங்களை |
| पठन्तः | கீர்த்தனஞ்செய்துகொண்டும் |
| ते रूपं | தங்களுடைய மங்களரூபத்தை |
| स्मरन्तः | தியானஞ்செய்துகொண்டும் |
| प्रमदभरसिन्धौ पतिताः | ஆனந்தஸாகரத்தில் மூழ்கியவர்களாய் |
| गुणकथाः | குணங்களையும் கதைகளையும் |

| | |
|---|---|
| कथयन्तः | ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு |
| चरन्तः | (வீடுமுதலியவற்றில் ஆசையில்லாதவர்களாய்) சஞ்சரிப்பவர்களாய் |
| ये भक्ताः | எந்த பக்தர்கள் |
| त्वयि खलु रमन्ते | தங்களிடத்திலேயே ரமிக்கின்றார்களோ ; |
| समधिगतसर्वाभिलषितान् | ஸர்வாபீஷ்டங்களையும் நன்கடைந்த |
| अमून् परं | அந்த பக்தர்களைமட்டுமே |
| अहं धन्यान् मन्ये | நான் பாக்கியசாலிகளாகக் கருதுகிறேன். |

गदक्लिष्टं कष्टं तव चरणसेवारसभरेऽ-
प्यनासक्तं चित्तं भवति बत विष्णो कुरु दयाम् ।
भवत्पादांभोजस्मरणरसिको नामनिवहा-
नहं गायंगायं कुहचन विवत्स्यामि विजने ॥ २

| | |
|---|---|
| गदक्लिष्टं चित्तं | ஆதிவியாதிகளால் கிலேசமடைந்த என் சித்தமானது |
| तव चरणसेवारसभरे अपि | தங்களுடைய திருவடிகளைச் சேவிப்பதாலுண்டாகும் ஆனந்தப்பெருக்கில்கூட |
| अनासक्तं भवति | பற்று இல்லாததாக இருக்கிறது. |
| बत कष्टं विष्णो | ஐயோ கஷ்டம் ! எங்கும் வியாபித்திருக்கும் ஈச ! |
| दयां कुरु | என்னிடம் தயை செய்யவேண்டும். |
| अहं भवत्पादांभोज-स्मरणरसिकः | நான் தங்கள் திருமலரடிகளை தியானம்பண்ணுவதில் ஆசையுடையவனுக |
| नामनिवहान् गायंगायं | தங்கள் திருநாமங்களை அடிக்கடி பாடிக்கொண்டு |
| कुहचन विजने | எங்காவது ஏகாந்தமான இடத்தில் |
| विवत्स्यामि | வாஸஞ்செய்ய விரும்புகின்றேன். |

कृपा ते जाता चेत् किमिव नहि लभ्यं तनुभृतां
मदीयक्लेशौघप्रशमनदशा नाम कियती ।
न के के लोकेऽस्मिन्ननिशमयि शोकाभिरहिताः
भवद्भक्ता मुक्ताः सुखगतिमसक्ता विदधते ॥ ३

| | |
|---|---|
| अयि ते कृपा | ஹே ஈசா ! தங்கள் கிருபை |
| जाता चेत् तनुभृतां | உண்டானல், சரீரம் படைத்தவர்களுக்கு |
| किं इव हि न लभ्यं | என்னதான் அடையமுடியாதது ? |
| मदीयक्लेशौघप्रशमन-दशा नाम कियती | எனது துன்பக்கூட்டங்களை நாசஞ்செய்வது என்பது எம்மாத்திரம் ? |
| अस्मिन् लोके भवद्भक्ताः | இவ்வுலகில் தங்கள் பக்தர்களான |
| के के अनिशं | எத்தனை பேர்கள் எப்பொழுதும் |

| | |
|---|---|
| शोकाभिरहिताः मुक्ताः | துக்கமேயில்லாதவர்களாய் ஜீவன்முக்தர்களாய் |
| असक्ताः सुखगतिं | ஒன்றிலும் பற்றற்றவர்களாய் தம்மிஷ்டம்போல் ஸஞ்சாரத்தை (அல்லது மோக்ஷத்தை) |
| न विदधते | செய்வதில்லை (அல்லது அடைவதில்லை)? |

मुनिप्रौढा रूढा जगति खलु गूढात्मगतयो
भवत्पादांभोजस्मरणविरुजो नारदमुखाः ।
चरन्तीश स्वैरं सततपरिनिर्भातपरचित्-
सदानन्दाद्वैतप्रसरपरिमग्नाः किमपरम् ॥ ४

| | |
|---|---|
| ईश जगति रूढाः | ஈசா! உலகப்பிரஸித்தர்களும், |
| गूढात्मगतयः | எங்ஙனம் என்று காணமுடியாத தங்கள் ஸஞ்சாரத்தை, மனோகதியை, ஆத்மஞானத்தையுடையவர்களும், |
| भवत्पादांभोजस्मरणविरुजः | தங்கள் பாதாரவிந்தங்களை ஸ்மரிப்பதால் துன்பம் நீங்கியவர்களுமான |
| नारदप्रमुखाः मुनिप्रौढाः | நாரதர் முதலிய முனிச்ரேஷ்டர்கள் |
| सततपरिनिर्भातपरचित्सदानन्दाद्वैतप्रसरपरिमग्नाः खलु | எப்பொழுதும் எல்லாவிடத்திலும் நன்றாகப் பிரகாசிக்கின்ற ஸச்சிதானந்தரூபமான அத்வைதப்பிரவாஹத்தில் ஆழ்ந்தவர்களாகவல்லவா |
| स्वैरं चरन्ति | கவலையில்லாமல் ஸஞ்சரிக்கிறார்கள். |
| अपरं किम् | அதற்குமேல் அவர்களுக்குப் பிரார்த்திக்கவேண்டியது என்ன உண்டு? |

भक्तिप्रार्थना ॥

भवद्भक्तिः स्फीता भवतु मम सैव प्रशमये-
दशेषक्लेशौघं न खलु हृदि सन्देहकणिका ।
न चेद्व्यासस्योक्तिस्तव च वचनं नैगमवचो
भवेन्मिथ्या रथ्यापुरुषवचनप्रायमखिलम् ॥ ५

| | |
|---|---|
| मम भवद्भक्तिः | எனக்குத் தங்களிடத்திலுள்ள பக்தியானது |
| स्फीता भवतु | பரிபூர்ணமாக இருக்கவேண்டும். |
| सा एव अशेषक्लेशौघं | அந்த பக்திதான் எல்லாத் துன்பங்களையும் |
| प्रशमयेत् | அறவே நாசஞ்செய்யும் (என்பதில்) |
| हृदि सन्देहकणिका | என் மனதில் ஸந்தேஹம் சிறிதுகூட |
| न खलु | இல்லவே இல்லை. |
| न चेत् व्यासस्य उक्तिः | அவ்விதமல்லாதபக்ஷத்தில், வியாஸவசனமும், |
| तव वचनं | தங்கள் திருவாக்கும், |

| | |
|---|---|
| नैगमवचः च अखिलं | வேதவாக்கியமும் எல்லாம் |
| रथ्यापुरुषवचनप्रायं | தெருவில் சுற்றித்திரியும் பாமரமனிதனுடைய |
| मिथ्या भवेत् | பொய்யாகமுடியும். [பேச்சைப்போல் |

भवद्भक्तिस्तावत्प्रमुखमधुरा त्वद्गुणरसात्
किमप्यारूढा चेदखिलपरितापप्रशमनी ।
पुनश्चान्ते स्वान्ते विमलपरिबोधोदयमिळ-
न्महानन्दाद्वैतं दिशति किमतः प्रार्थ्यमपरम् ॥ ६

| | |
|---|---|
| भवद्भक्तिः तावत् | தங்களிடத்தில் வைக்கப்படும் பக்தியோவென்றால் |
| त्वद्गुणरसात् | தங்களுடைய குணத்தைக் கேட்பதிலுள்ள ரஸத்தால் |
| प्रमुखमधुरा | ஆரம்பத்திலேயே மதுரமானது. |
| किमपि आरूढा चेत् | சிறிது விருத்தியடைந்ததேயானால் |
| अखिलपरितापप्रशमनी | எல்லாத் தாபங்களையும் வேருடன் நாசஞ்செய்கிறது. |
| पुनः | மறுபடியும் |
| अन्ते स्वान्ते | பரிணயதசையில் ஹிருதயத்தில் |
| विमलपरिबोधोदय- | நிர்மலஞானோதயத்துடன் கூடின பிரம்மானந்தத்தில் |
| मिलन्महानन्दाद्वैतं च | இரண்டறக்கலத்தலையும் |
| दिशति | கொடுக்கிறது. |
| अतःपरं | இதற்குமேல் |
| प्रार्थ्यं किं | வேண்டத்தகுந்தது வேறென்ன உண்டு? |

विधूय क्लेशान् मे कुरु चरणयुग्मं धृतरसं
भवत्क्षेत्रप्राप्तौ करमपि च ते पूजनविधौ ।
भवन्मूर्त्यालोके नयनमथ ते पादतुळसी-
परिघ्राणे घ्राणं श्रवणमपि ते चारुचरिते ॥ ७

| | |
|---|---|
| मे क्लेशान् विधूय | எனது கஷ்டங்களைப் போக்கடித்து |
| चरणयुग्मं | என் இரு கால்களை |
| भवत्क्षेत्रप्राप्तौ | தங்கள் திருக்கோயிலையடைவதிலும், |
| करं अपि च ते पूजनविधौ | கைகளைத் தங்களைப் பூஜை செய்வதிலும், |
| अथ नयनं | அவ்விதமே கண்களை |
| भवन्मूर्त्यालोके | தங்கள் மங்களவிக்ரஹத்தை தரிசிப்பதிலும், |
| घ्राणं ते | மூக்கைத் தங்களுடைய |
| पादतुलसीपरिघ्राणे | திருவடிகளிலிருக்கும் துளஸியை முகருவதிலும், |
| श्रवणं | காதுகளை |
| ते चारुचरिते अपि | தங்களுடைய நல்ல சரித்திரங்களிலும் |
| धृतरसं कुरु | ரஸமுடையதாகத் தாங்கள் செய்தருள்வேண்டும். |

प्रभूताधिव्याधिप्रसभचलिते मामकहृदि
त्वदीयं तद्रूपं परमसुखचिद्रूपमुदियात् ।
उदञ्चद्रोमाञ्चो गळितबहुहर्षाश्रुनिवहो
यथा विस्मर्यासं दुरुपशमपीडापरिभवान् ॥ ८

| | |
|---|---|
| **उदञ्चद्रोमाञ्चः** | ரோமாஞ்சமடைந்தவனாகவும், |
| **गलितबहुहर्षाश्रुनिवहः** | ஆனந்தக்கண்ணீர் பெருக்கியவனாகவும் |
| **दुरुपशमपीडापरिभवान्** | வருத்தப்பட்டும் போக்கடிக்கமுடியாத ஆத்யாத்மி [காதி துக்கங்களை |
| **यथा** | எவ்விதமானால் |
| **विस्मर्यासं** | நான் மறப்பேனோ அவ்விதம் |
| **प्रभूताधिव्याधि- प्रसभचलिते** | அளவற்ற கவலைகளாலும் வியாதிகளாலும் கவரப்பட்டுச் சலிக்கின்ற |
| **मामकहृदि** | என்னுள்ளத்தில் |
| **परमरसचिद्रूपं त्वदीयं** | ஸச்சிதானந்தரூபமான தங்களுடைய |
| **तत् रूपं उदियात्** | அந்த ஸ்வரூபம் தோன்ற (உதயமாக) வேண்டும். |

मरुद्गेहाधीश त्वयि खलु पराञ्चोऽपि सुखिनो
भवत्स्नेही सोऽहं सुबहु परितप्ये च किमिदम् ।
अकीर्तिस्ते मा भूद्वरद! गदभारं प्रशमयन्
भवद्भक्तोत्तंसं झटिति कुरु मां कंसदमन! ॥ ९

| | |
|---|---|
| **मरुद्गेहाधीश! त्वयि** | குருவாயூரப்பா! தங்களிடத்தில் |
| **पराञ्चः अपि** | பராமுகமாயிருப்பவர்கள்கூட |
| **सुखिनः खलु** | ஸுகமுடையவர்களாகவல்லவா காணப்படுகின்றனர். |
| **भवत्स्नेही सः अहं च** | தங்களிடம் பக்தியுள்ள நானோ என்றால் |
| **सुबहु परितप्ये** | மிகவும் வருத்தப்படுகிறேன். |
| **किमिदं** | இதென்ன விஷமச்செயல்? |
| **वरद! ते** | ஹே வரதனே! தங்களுக்கு |
| **अकीर्तिः मा भूत्** | அபகீர்த்தி உண்டாகவேண்டாம். |
| **कंसदमन!** | கம்ஸனைக்கொன்றவரே! |
| **मे गदभारं प्रशमयन्** | என் வியாதிகளை நாசஞ்செய்து |
| **मां झटिति** | என்னைச் சீக்கிரம் |
| **भवद्भक्तोत्तंसं कुरु** | தங்கள் பக்தர்களில் சிறந்தவனாக செய்யவேண்டும். |

किमुक्तैर्भूयोभिस्तव हि करुणा यावदुदिया-
द्दहं तावद्देव! प्रहितविविधार्तप्रलपितः ।

पुरः क्लृप्ते पादे वरद तव नेष्यामि दिवसान्
यथाशक्ति व्यक्तं नतिनुतिनिषेवा विरचयन् ॥ १०

| | |
|---|---|
| देव! | ஹே தேவா! |
| भूयोभिः उक्तैः किं | அதிகம் சொல்லுவதால் என்ன பிரயோஜனம்? |
| वरद! तव हि | ஹே வரதனே! தங்களுக்கே |
| करुणा यावत् उदियात् | தயை எப்பொழுதுண்டாகிறதோ |
| तावत् अहं | அதுவரையில் நான் |
| प्रहितविविधार्तप्रलपितः | பலவாறுகப் புலம்புவதை விட்டவனுக |
| पुरः क्लृप्ते | என் முன் விளங்கும் |
| तव पादे यथाशक्ति | தங்கள் திருவடிகளில் என் சக்திக்குத்தக்கவாறு |
| व्यक्तं नतिनुतिनिषेवाः | நன்ருக நமஸ்காரம், ஸ்தோத்திரம், பூஜை இவைகளை |
| विरचयन् | செய்துகொண்டு |
| दिवसान् नेष्यामि | நாட்களைக் கழிப்பேன். |

इति श्रीमन्नारायणीये भक्तस्वरूपवर्णनं भक्तिप्रार्थना चेति तृतीयं दशकम् ॥ ३ ॥

श्रीमद्भागवतप्रथमस्कन्धपरिच्छेदः समाप्तः ॥ १ ॥

आदितः श्लोकाः 30.  प्रथमस्कन्धे श्लोकाः 30.

## अथ द्वितीयस्कन्धपरिच्छेदः ॥

### चतुर्थं दशकम्— நான்காவது தசகம்.

अष्टाङ्गयोगवर्णनम्, योगसिद्धिवर्णनं च—அஷ்டாங்கயோகத்தையும் யோகஸித்தியையும் வர்ணிப்பது.

कल्यतां मम कुरुष्व तावतीं कल्यते भवदुपासनं यया ।
स्पष्टमष्टविधयोगचर्यया पुष्टयाऽऽशु तव तुष्टिमाप्नुयाम् ॥ १

| | |
|---|---|
| यया | எவ்வளவு ஆரோக்கியமிருந்தால் |
| भवदुपासनं कल्यते | தங்களுடைய ஆராதனம் செய்யப்படுமோ; |
| तावतीं कल्यतां | அவ்வளவு ஆரோக்யத்தை |
| मम कुरुष्व | எனக்கு செய்தருளவேண்டும். |
| पुष्टया अष्टविधयोगचर्यया | ஸம்பூர்ணமான எட்டுவித அங்கங்களையுடைய யோகத்தையனுஷ்டிப்பதால் |
| आशु तव तुष्टिं | சீக்கிரமாக தங்களுடைய பிரஸாதத்தை |
| आप्नुयां स्पष्टं | நான் அடைவேன்; இது நிச்சயம். |

ब्रह्मचर्यदृढतादिभिर्यमैराप्लवादिनियमैश्च पाविताः ।
कुर्महे दृढममी सुखासनं पङ्कजाद्यमपि वा भवत्पराः ॥ २

भवत्पराः अमी — தங்கள் பக்தர்களான இந்த நாங்கள்
ब्रह्मचर्यदृढतादिभिः — பிரம்மசரியத்தின் தார்டியம் முதலிய
यमैः — யமங்களைக்கொண்டும்
आप्लवादिनियमैः च — ஸ்நானம் முதலிய நியமங்களைக்கொண்டும்
पाविताः — பரிசுத்தர்களாக்கப்பட்டவர்களாய்
पङ्कजाद्यं — பத்மாஸனம் முதலியவற்றையாவது
अपि वा सुखासनं — அல்லது ஸுகாஸனத்தையாவது
दृढं कुर्महे — திருடமாகச் செய்கிறோம்.

तारमन्तरनुचिन्त्य सन्ततं प्राणवायुमभियम्य निर्मलाः ।
इन्द्रियाणि विषयादथापहृत्याऽऽस्महे भवदुपासनोन्मुखाः ॥ ३

तारं अन्तः — பிரணவத்தை உள்ளில்
सन्ततं अनुचिन्त्य — தைலதாரைபோலவும், மணிநாதம்போலவும் இடைவிடாது சிந்தனை செய்தும்,
प्राणवायुं अभियम्य निर्मलाः — பிராணுயாமஞ்செய்தும் பரிசுத்தர்களாகி
अथ इन्द्रियाणि — பிறகு இந்திரியங்களை
विषयात् अपहृत्य — அதனதன் விஷயத்திலிருந்து திருப்பிவிட்டு
भवदुपासनोन्मुखाः — தங்களையுபாஸிப்பதில் விருப்பமுடையவர்களாக
आस्महे — இருக்கிறோம்.

अस्फुटे वपुषि ते प्रयत्नतो धारयेम धिषणां मुहुर्मुहुः ।
तेन भक्तिरसमन्तरार्द्रतामुद्वहेम भवदङ्घ्रिचिन्तकाः ॥ ४

अस्फुटे ते वपुषि — அஸ்பஷ்டமான தங்களுடைய மங்களவிக்கிரஹத்தில்
प्रयत्नतः धिषणां — மிகப் பிரயத்தனப்பட்டு புத்தியை
मुहुः मुहुः धारयेम — அடிக்கடி நிலைநிறுத்துவோம்.
तेन भवदङ्घ्रिचिन्तकाः — அதனுல் தங்கள் திருவடிகளைத் தியானிக்கின்ற நாங்கள்
भक्तिरसं — பக்திரஸத்தையும்
अन्तः आर्द्रतां उद्वहेम — அதனுல் உள்ளில் கனிவையும் பெறுவோமாக.

विस्फुटावयवभेदसुन्दरं त्वद्वपुस्सुचिरशीलनावशात् ।
अश्रमं मनसि चिन्तयामहे ध्यानयोगनिरतास्त्वदाश्रयाः ॥ ५

त्वदाश्रयाः — தங்களை ஆசிரயித்த நாங்கள்
ध्यानयोगनिरताः — தியானயோகத்தை இடைவிடாமல் அனுஷ்டிப்பவர்களாய்
सुचिरशीलनावशात् — வெகுகாலம் அப்யஸித்ததன் காரணமாக
विस्फुटावयवभेदसुन्दरं — மிகவும் ஸ்பஷ்டமான அவயவபேதங்களையுடையதும், அதனுல் அழகானதுமான
त्वद्वपुः अश्रमं — தங்கள் திருமேனியை சிரமமில்லாமலே
मनसि चिन्तयामहे — மனதில் தியானித்துக்கொண்டிருப்போம்.

ध्यायतां सकलमूर्तिमीदृशीमुन्मिषन्मधुरताहृतात्मनाम् ।
सान्द्रमोदरसरूपमान्तरं ब्रह्म रूपमयि तेऽवभासते ॥ ६

| | |
|---|---|
| अयि | ஹே! பகவன் ! |
| ते ईदृशीं | தங்களுடைய முன் கூறப்பட்டபடி |
| सकलमूर्तिं | கரசரணாதிகளுடன் கூடிய ஸ்வரூபத்தை |
| ध्यायतां | தியானம்பண்ணுகிறவர்களும் |
| उन्मिषन्मधुरता- हृतात्मनां | அதனால் பிரகாசிக்கின்ற ஸௌபாக்கியத்தால் கவரப் பட்ட மனதையுடையவர்களுமான எங்களுக்கு |
| सान्द्रमोदरसरूपं | பூர்ணானந்தரஸமாகிற உருவத்துடன் கூடினதும் |
| रूपं ब्रह्म | தங்களுடைய ஸ்வரூபபூதமுமான பரப்பிரம்மம் |
| आन्तरं अवभासते | மனதினால்மட்டுமறியத்தகுந்ததாய் பிரகாசிக்கின்றது. |

तत्समास्वदनरूपिणीं स्थितिं त्वत्समाधिमयि विश्वनायक ।
आश्रिताः पुनरतः परिच्युतावारभेमहि च धारणादिकम् ॥ ७

| | |
|---|---|
| अयि विश्वनायक | ஹே! விசுவநாதா ! |
| तत्समास्वदनरूपिणीं स्थितिं | அந்தப் பிரம்மத்தை அனுபவித்துக்கொண்டிருப்பதாகிற |
| त्वत्समाधिं | தங்களை விஷயமாகக்கொண்ட நிர்விகல்பஸமாதியை |
| आश्रिताः अतः | அடைந்த நாங்கள், அந்த ஸமாதியிலிருந்து |
| परिच्युतौ पुनः च | நழுவுதலேற்பட்டால் மறுபடியும் |
| धारणादिकं आरभेमहि | தாரணை முதலியதை தொடங்குவோம். |

इत्थमभ्यसननिर्भरोल्लसत्त्वत्परात्मसुखकल्पितोत्सवाः ।
मुक्तभक्तकुलमौलितां गताः सञ्चरेम शुकनारदादिवत् ॥ ८

| | |
|---|---|
| इत्थं | இவ்விதம் |
| अभ्यसननिर्भरोल्लस- त्वत्परात्मसुख- कल्पितोत्सवाः | தாரணா த்யான ஸமாதிகளை அடிக்கடி அப்யாஸம் செய்வதால் அதிகமாக உண்டாகின்ற தங்கள் ஸ்வரூபமான பரப்பிரம்மத்தையனுபவிப்பதாலுண்டுபண்ணப் பட்ட உத்ஸவத்தையுடையவர்களாய் |
| मुक्तभक्तकुलमौलितां गताः | ஜீவன்முக்தர்களான பக்தர்களுள் பிராதான்யத்தையடைந்தவர்களாய் |
| शुकनारदादिवत् | சுகன் நாரதன் முதலியவர்களைப்போல |
| सञ्चरेम | நாங்கள் சஞ்சரிப்போம். |

त्वत्समाधिविजये तु यः पुनर्मङ्क्षु मोक्षरसिकः क्रमेण वा ।
योगवश्यमनिलं षडाश्रयैरुन्नयत्यज सुषुम्नया शनैः ॥ ९

| | |
|---|---|
| शिखिनि सकलहरिति | காட்டுத்தீ எல்லா திக்குகளிலும் (நாற்புறமும்) |
| घोरभाङ्कारभीमे | கோரமான பாங்காரசத்தத்தால் பயங்கரமாக |
| दीप्ते सर्वे | எரியும்பொழுது அவர்களெல்லோரும் |
| विहतमार्गाः | வழி தகையப்பட்டு |
| अर्धदग्धाः इव आर्ताः | பாதி எரிந்தவர்கள்போல வருந்தியவர்களாய் |
| अहह भुवनबन्धो | 'ஐயயோ! லோகபந்துவே! |
| पाहि पाहि इति | காப்பாற்றவேண்டும், காப்பாற்றவேண்டும்' என்று |
| तापहर्तारं | ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களைப் போக்கடிக்கின்ற |
| त्वां एकं | தங்களை ஒருவரையே |
| शरणं उपगताः | சரணமடைந்தார்கள். |

अलमलमतिभीत्या सर्वतो मीलयध्वं
दृशमिति तव वाचा मीलिताक्षेषु तेषु ।
क्वनु दवदहनोऽसौ कुत्र मुञ्जाटवी सा
सपदि ववृतिरे ते हन्त भाण्डीरदेशे ॥ ५

| | |
|---|---|
| अलं अतिभीत्या अलं | 'போதும், அதிகம் பயந்தது போதும்; |
| सर्वतः दृशं मीलयध्वं | நீங்களெல்லோரும் கண்களை மூடிக்கொள்ளுங்கள்' |
| इति तव वाचा | என்ற தங்கள் வாக்கினால் |
| तेषु मीलिताक्षेषु | அவர்கள் கண்களை மூடிக்கொண்டபொழுது |
| असौ दवदहनः क्वनु | அந்தக் காட்டுத்தீயெங்கே? |
| सा मुञ्जाटवी कुत्र | அந்த முஞ்சிக்காடு எங்கே? |
| सपदि ते भाण्डीरदेशे | உடனே அவர்கள் பாண்டீரமரத்தினடியில் |
| ववृतिरे हन्त | இருந்தனர்; ஆச்சரியம்! |

जय जय तव माया केयमीशेति तेषां
नुतिभिरुदितहासो बद्धनानाविलासः ।
पुनरपि विपिनान्ते प्राचरः पाटलादि-
प्रसवनिकरमात्रग्राह्यघर्मानुभावे ॥ ६

| | |
|---|---|
| ईश जय जय | 'ஹே ஈசா! தாங்கள் மேன்மைபெற்று விளங்கவேண்டும். |
| तव इयं माया का | தங்களுடைய இந்த மாயை எப்படிப்பட்டது?' |
| इति तेषां नुतिभिः | என்றிவ்விதமான அவர்களுடைய புகழ்ச்சொற்களால் |
| उदितहासः | மந்தஹாஸமுடையவராய் |
| बद्धनानाविलासः | பற்பல லீலைகளைச் செய்துகொண்டு |
| पाटलादिप्रसवनिकर-मात्रग्राह्यघर्मानुभावे | பாதிரி முதலிய பூக்களால் மட்டும் அறியக்கூடிய வேனலின் ஸ்வபாவத்தையுடைய |
| विपिनान्ते | வனமத்தியில் |
| पुनः अपि प्राचरः | மறுபடியும் சஞ்சரித்தீர்களல்லவா. |

त्वयि विमुखमिवोच्चैस्तापभारं वहन्तं
तव भजनवदन्तःपङ्कमुच्छोषयन्तम् ।
तव भुजवदुदञ्चद्भूरितेजःप्रवाहं
तपसमयमनैषीर्यामुनेषु स्थलेषु ॥ ७

| | |
|---|---|
| त्वयि विमुखं इव | தங்களிடத்தில் பக்தியில்லாதவனைப்போல |
| उच्चैः तापभारं | அதிகமான ஆத்யாத்மகம் முதலிய தாபத்தை (சூடை) |
| वहन्तं | வஹிக்கின்றதும், |
| तव भजनवत् | தங்களுடைய சேவைபோல |
| अन्तःपङ्कं | உள்ளத்தில் இருக்கும் பாபத்தை (சேற்றை) |
| उच्छोषयन्तं तव भुजवत् | போக்கடிப்பதும் (உலர்த்துவதும்), தங்கள் கைபோல |
| उदञ्चद्भूरितेजःप्रवाहं | உயரக்கிளம்புகிற அதிகமான பராக்ரமத்தின் (வெயிலின்) பெருக்கையுடையதுமான |
| तपसमयं | வேனற்காலத்தை |
| यामुनेषु स्थलेषु | யமுனாதீரத்திலிருக்கும் ப்ரதேசங்களில் |
| अनैषीः | கழித்தீர்களல்லவா. |

तदनु जलदजालैस्त्वद्वपुस्तुल्यभाभि-
र्विकसदमलविद्युत्पीतवासोविलासैः ।
सकलभुवनभाजां हर्षदां वर्षवेलां
क्षितिधरकुहरेषु स्वैरवासी व्यनैषीः ॥ ८

| | |
|---|---|
| तदनु | அதன்பிறகு |
| त्वद्वपुस्तुल्यभाभिः | தங்கள் திருமேனிக்கொத்த நிறமுடையவைகளும் |
| विकसदमलविद्युत्पीतवासोविलासैः | ப்ரகாசிக்கின்ற நிர்மலமான மின்னற்கொடியாகிற மஞ்சப்பட்டாடையின் காந்தியுடையவைகளுமான |
| जलदजालैः | மேகக்கூட்டங்களால் |
| सकलभुवनभाजां | உலகிலிருக்கும் எல்லோருக்கும் |
| हर्षदां वर्षवेलां | சந்தோஷமளிக்கும் மழைக்காலத்தை |
| क्षितिधरकुहरेषु | மலைக்குகைகளில் |
| स्वैरवासी | தன்னிஷ்டப்போல வஸித்துக்கொண்டு |
| व्यनैषीः | கழித்தீர்களல்லவா. |

कुहरतलनिविष्टं त्वां गरिष्ठं गिरीन्द्रः
शिखिकुलनवकेकाकाकुभिः स्तोत्रकारी ।
स्फुटकुटजकदम्बस्तोमपुष्पाञ्जलिं च
प्रविदधदनुभेजे देव गोवर्धनोऽसौ ॥ ९

| | |
|---|---|
| देव | க்ரீடாமனுஷ்யனை ஹே தேவ! |
| गिरीन्द्रः असौ गोवर्धनः | மலையரசான இந்த கோவர்த்தனமலை |
| कुहरतलनिविष्टं | தன் குகைகளில் வஸிப்பவரும் |
| गरिष्ठं त्वां | மிக மேன்மைபெற்றவருமான தங்களை |
| शिखिकुलनव- केकाकाकुभिः | மயில்களின் இனியதும், சந்தோஷசூசகங்களுமான கேகாசப்தங்களால் |
| स्तोत्रकारी | தங்களைப் புகழ்ந்துகொண்டும், |
| स्फुटकुटजकदंब- स्तोमपुष्पाञ्जलिं | மலர்ந்த மலைமல்லிகை கதம்பம் இவைகளுடைய பூக்குவியல்களால் புஷ்பாஞ்சலியை |
| प्रविदधत् च अनुभेजे | செய்துகொண்டும் ஸேவித்ததல்லவா. |

अथ शरदमुपेतां तां भवद्भक्तचेतो-
विमलसलिलपूरां मानयन् काननेषु ।
तृणममलवनान्ते चारु सञ्चारयन् गाः
पवनपुरपते त्वं देहि मे देहसौख्यम् ॥ १०

| | |
|---|---|
| अथ उपेतां | அதன்பிறகு வந்ததும் |
| भवद्भक्तचेतो- विमलसलिलपूरां | தங்கள் பக்தர்களுடைய உள்ளம்போல நிர்மலமான ஜலப்ரவாஹத்தையுடையதுமான |
| तां शरदं | அந்த சரத்காலத்தை |
| काननेषु मानयन् | காடுகளில் அனுபவித்துக்கொண்டு |
| अमलवनान्ते गाः | நிர்மலமான காட்டில் பசுக்களை |
| चारु तृणं सञ्चारयन् | நன்கு புல்மேய்த்துக்கொண்டிருந்த |
| पवनपुरपते | ஹே குருவாயூரப்பா! |
| मे देहसौख्यं देहि | எனக்கு தேஹசுகத்தைத் தந்தருளவேண்டும். |

इति श्रीमन्नारायणीये दावाग्निमोक्षवर्णनं नाम अष्टपञ्चाशं दशकं समाप्तम् ॥ ५८ ॥

आदितः श्लोकाः 597. दशमस्कन्धे श्लोकाः 222.

एकोनषष्टितमं दशकम्— ஐம்பத்தொன்பதாவது தசகம்.

वेणुगानवर्णनम्—வேணுகானத்தை வர்ணிப்பது.

त्वद्वपुर्नवकलायकोमलं प्रेमदोहनमशेषमोहनम् ।
ब्रह्म तत्त्वपरचिन्मुदात्मकं वीक्ष्य संमुमुहुरन्वहं स्त्रियः ॥ १

| | |
|---|---|
| नवकलायकोमलं | புதுக்காசாம்பூபோல கோமளமானதும் |
| प्रेमदोहनं | பிரேமையைப் பெருக்குகிறதும், |
| अशेषमोहनं | எல்லோரையும் முற்றிலும் மயக்குவதும், |
| तत्त्वपरचिन्मुदात्मकं | ஸச்சிதானந்தரூபமானதுமான |
| त्वद्वपुः ब्रह्म वीक्ष्य | தங்கள் திருமேனியாகிற ப்ரம்மத்தைக் கண்டு |
| स्त्रियः अन्वहं संमुमुहुः | கோபிகைகள் ஒவ்வொருநாளும் மிக மயக்கமடைந்தனர். |

मन्मथोन्मथितमानसाः क्रमात्त्वद्विलोकनरतास्ततस्ततः ।
गोपिकास्तव न सेहिरे हरे काननोपगतिमप्यहर्मुखे ॥ २

हरे गोपिकाः क्रमात् ஹே ஸ்ரீஹரே! கோபிகைகள் கிரமத்தில்
मन्मथोन्मथितमानसाः மன்மதனால் கலக்கப்பட்ட மனதையுடையவர்களாய்
ततः ततः எல்லாயிடத்தும் எப்பொழுதும்
त्वद्विलोकनरताः தங்களைப் பார்க்க விரும்பியவர்களாய்
अहर्मुखे காலையில்
तव काननोपगतिं अपि தங்கள் காட்டிற்குச் செல்லுவதைக்கூட
न सेहिरे பொறுக்கவில்லை.

निर्गते भवति दत्तदृष्टयस्त्वद्गतेन मनसा मृगेक्षणाः ।
वेणुनादमुपकर्ण्य दूरतस्त्वद्विलासकथयाऽभिरेमिरे ॥ ३

निर्गते भवति காட்டிற்கு புறப்பட்ட தங்களிடத்திலேயே
दत्तदृष्टयः मृगेक्षणाः கண்ணைச்செலுத்திய மான்கண்ணியர்
त्वद्गतेन मनसा தங்களிடம் சென்ற மனத்துடன்
दूरतः वेणुनादं उपकर्ण्य வெகு தூரத்திலிருந்தே வேணுநாதத்தைக் கேட்டு
त्वद्विलासकथया தங்கள் லீலைகளைச் சொல்லிக்கொண்டே
अभिरेमिरे களித்தனர்.

काननान्तमितवान् भवानपि स्निग्धपादपतले मनोरमे ।
व्यत्ययाकलितपादमास्थितः प्रत्यपूरयत वेणुनालिकाम् ॥ ४

काननान्तं इतवान् காட்டிற்குச் சென்ற
भवान् अपि मनोरमे தாங்களும் மனோஹரமான
स्निग्धपादपतले நல்ல நிழலுள்ள ஒரு மரத்தினடியில்
व्यत्ययाकलितपादं கால்களை மாற்றிவைத்து
आस्थितः நின்றுகொண்டு
वेणुनालिकां प्रत्यपूरयत புல்லாங்குழல் ஊதினீர்களல்லவா.

मारबाणधुतखेचरीकुलं निर्विकारपशुपक्षिमण्डलम् ।
द्रावणं च दृषदामपि प्रभो तावकं व्यजनि वेणुकूजितम् ॥ ५

प्रभो तावकं वेणुकूजितं ஹே ப்ரபுவே! தங்களுடைய வேணுநாதம்
मारबाणधुतखेचरीकुलं காமவிகாரத்தால் அப்ஸரஸ்திரீகளைக்கூட சலிக்கச் செய்வதாகவும்,
निर्विकारपशुपक्षिमण्डलं பசுபக்ஷிக்கூட்டங்களையசைவற்றதாக செய்வதாகவும்,
दृषदां अपि द्रावणं च व्यजनि கல்லுகளையும் கரையச்செய்வதாகவும் ஆனது.

वेणुरन्ध्रतरलाङ्गुलीदलं तालसञ्चलितपादपल्लवम् ।
तत्स्थितं तव परोक्षमप्यहो संविचिन्त्य मुमुहुर्व्रजाङ्गनाः ॥ ६

वेणुरन्ध्रतरलाङ्गुलीदलं வேணுவின் துவாரங்களில் சலிக்கின்ற விரல் நுனிகளையுடையதும்,
तालसञ्चलितपादपल्लवं தாளத்தையனுசரித்து அசைகின்ற துளிர்போன்ற கால்களையுடையதுமான
तव तत् स्थितं தங்களுடைய அந்த நிலையை
परोक्षं अपि संविचिन्त्य நேரில் காணுதிருந்தாலுங்கூட மனதால் ஆலோசித்து
व्रजाङ्गनाः मुमुहुः अहो கோபஸ்திரீகள் மோஹமடைந்தனர்; ஆச்சரியம்.

निर्विशङ्कभवदङ्गदर्शिनीः खेचरीः खगमृगान् पशूनपि ।
त्वत्पदप्रणयि काननं च ता धन्यधन्यमिति नन्वमानयन् ॥ ७

निर्विशङ्कभवदङ्गदर्शिनीः தங்குதடையின்றி தங்கள் திருமேனியை தர்சிக்கின்ற
खेचरीः தேவஸ்திரீகளையும்
खगमृगान् पशून् अपि பறவைகளையும், மிருகங்களையும், பசுக்களையும்
त्वत्पदप्रणयि தங்கள் திருவடிகளில் சினேகமுள்ள
काननं च ताः ப்ருந்தாவனத்தையும் அந்த கோபிகைகள்
धन्यधन्यं इति மிக மிக பாக்யசாலிகள் என்று
अमानयन् ननु ஆமோதித்தனரல்லவா.

आपिबेयमधरामृतं कदा वेणुभुक्तरसशेषमेकदा ।
दूरतो बत कृतं दुराशयेत्याकुला मुहुरिमाः समामुहन् ॥ ८

वेणुभुक्तरसशेषं வேணுவால் அனுபவிக்கப்பட்டு மீதியான ரஸத்தையுடைய
अधरामृतं कदा एकदा அதராம்ருதத்தை, என்று ஒருபொழுதாவது
आपिबेयं बत நான் பானஞ்செய்வேன்? ஆ! கஷ்டம்.
दूरतः வெகுதூரத்திலிருக்கும்
दुराशया कृतं பேராசையால் என்ன ப்ரயோஜனம்?
इति इमाः आकुलाः என்று இவர்கள் கலங்கியவர்களாய்
मुहुः समामुहन् அடிக்கடி மயக்கமடைந்தனர்.

प्रत्यहं च पुनरित्थमङ्गनाश्चित्तयोनिजनितादनुग्रहात् ।
बद्धरागविवशास्त्वयि प्रभो नित्यमापुरिह कृत्यमूढताम् ॥ ९

प्रभो प्रत्यहं च अङ्गनाः ஹே! ப்ரபுவே! ஒவ்வொரு நாளும் கோபிகைகள்
पुनः इत्थं மறுபடியும் இவ்விதம்
चित्तयोनिजनितात् மன்மதனுல் உண்டுபண்ணப்பட்ட
अनुग्रहात् त्वयि அனுக்கிரகத்தால் தங்களிடத்தில்
बद्धरागविवशाः ஆசையைவைத்து அதனுல் பரவசர்களாகி
नित्यं इह ஒவ்வொருநாளும் வீடுகளில்
कृत्यमूढतां आपुः செய்யவேண்டியதில் அறியாமையையடைந்தனர்.

रागस्तावज्जायते हि स्वभावान्मोक्षोपायो यत्नतः स्यान्न वा स्यात् ।
तासान्त्वेकं तद् द्वयं लब्धमासीद्भाग्यं भाग्यं पाहि वातालयेश ॥ १०

| | |
|---|---|
| रागः तावत् स्वभावात् | அனுராகம் (ஆசை) என்பது சுபாவத்திலேயே |
| जायते हि | உண்டாகின்றதல்லவா. |
| मोक्षोपायः | மோக்ஷத்திற்கு உபாயம் |
| यत्नतः स्यात् | பிரயத்னத்தால் உண்டாகலாம்; |
| न वा स्यात् | உண்டாகாமலுமிருக்கலாம். |
| तु तासां | ஆனால் அந்த கோபிகைகளுக்கு |
| तत् द्वयं एकं | அவ்விரண்டும் ஒன்றாகவே |
| लब्धं आसीत् | கிட்டிவிட்டதல்லவா. |
| भाग्यं भाग्यं | அவர்களுடைய பாக்கியமே பாக்கியம். |
| वातालयेश | ஹே குருவாயூரப்பா! |
| पाहि | என்னைக் காப்பாற்றவேண்டும். |

इति श्रीमन्नारायणीये वेणुगानवर्णनं नाम एकोनषष्टितमं दशकं समाप्तम् ॥ ५९ ॥

आदितः श्लोकाः 607.  दशमस्कन्धे श्लोकाः 232.

## षष्टितमं दशकम्—அறுபதாவது தசகம்.

गोपीवस्त्रापहारवर्णनम्—கோபீவஸ்திராபஹாரத்தை வர்ணிப்பது.

मदनातुरचेतसोऽन्वहं भवदङ्घ्रिद्वयदास्यकाम्यया ।
यमुनातटसीम्नि सैकतीं तरलाक्ष्यो गिरिजां समार्चिचन् ॥ १

| | |
|---|---|
| अन्वहं | ஒவ்வொரு நாளும் |
| मदनातुरचेतसः | காமத்தால் பரவசமான மனதையுடைய |
| तरलाक्ष्यः | சஞ்சலாக்ஷிகளான கோபிகைகள் |
| भवदङ्घ्रिद्वय-दास्यकाम्यया | தங்கள் திருவடிகளிரண்டையும் சேவிக்கும் விருப்பத்தால் |
| यमुनातटसीम्नि सैकतीं | யமுனாதிக்கரையில் மணலாலுண்டுபண்ணப்பட்ட |
| गिरिजां | மலைமகளான ஸ்ரீபார்வதியை |
| समार्चिचन् | நன்கு பூஜித்தனர். |

तव नामकथारताः समं सुदृशः प्रातरुपागता नदीम् ।
उपहारशतैरपूजयन्दयितो नन्दसुतो भवेदिति ॥ २

| | |
|---|---|
| सुदृशः | அழகான கண்களையுடைய அவர்கள் |
| तव नामकथारताः | தங்கள் திருநாமங்களையுச்சரிப்பதில் விருப்பமுடையவர்களாய் |
| प्रातः समं | விடியற்காலத்தில் ஒன்றுசேர்ந்து |
| नदीं उपागताः नन्दसुतः | யமுனாதிக்குச் சென்று, 'நந்தகுமாரன் |
| दयितः भवेत् इति | (எங்களுக்கு) கணவனாகவேண்டும்' என்று பிரார்த்தித்து |

उपहारशतैः அனேகம் காணிக்கைகளுடன்
अपूजयन् தேவியைப் பூஜித்தனர்.

इति मासमुपाहितव्रतास्तरलाक्षीरभिवीक्ष्य ता भवान् ।
करुणामृदुलो नदीतटं समयासीत्तदनुग्रहेच्छया ॥ ३

इति मासं இவ்வாறு ஒரு மாதம் முழுவது
उपाहितव्रताः விரதமனுஷ்டித்தவர்களும்
तरलाक्षीः சஞ்சலமான கண்களையுடையவர்களுமான
ताः अभिवीक्ष्य அந்த கோபிகைகளைக்கண்டு
भवान् करुणामृदुलः தாங்கள் கருணையால் கனிந்தவராக
तदनुग्रहेच्छया அவர்களையனுக்கிரஹிக்க விருப்பத்துடன்
नदीतटं समयासीत् யமுனைக்கரைக்குச் சென்றீர்களல்லவா.

नियमावसितौ निजाम्बरं तटसीमन्यवमुच्य तास्तदा ।
यमुनाजलखेलनाकुलाः पुरतस्त्वामवलोक्य लज्जिताः ॥ ४

नियमावसितौ निजाम्बरं விரதம் முடிந்தபொழுது அவரவர் வஸ்திரத்தை
तटसीमनि अवमुच्य ताः கரையில் அவிழ்த்துவைத்து, அவர்கள்
यमुनाजलखेलनाकुलाः யமுனாஜலத்தில் விளையாடுவதில் ஈடுபட்டவர்களாய்
तदा त्वां पुरतः अवलोक्य அப்பொழுது தங்களை எதிரில் கண்டு
लज्जिताः வெட்கமடைந்தனர்.

त्रपया नमिताननास्वथो वनितास्वम्बरजालमन्तिके ।
निहितं परिगृह्य भूरुहो विटपं त्वं तरसाऽधिरूढवान् ॥ ५

अथो वनितासु அப்பொழுது அப்பெண்கள்
त्रपया नमिताननासु வெட்கத்தால் தலைகுனிந்து நிற்கும்பொழுது
अन्तिके निहितं கரையில் வைக்கப்பட்டிருந்த
अम्बरजालं परिगृह्य வஸ்திரங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு
त्वं तरसा தாங்கள் சீக்கிரமாக
भूरुहः विटपं अधिरूढवान् மரக்கொம்பில் ஏறிக்கொண்டீர்களல்லவா.

इह तावदुपेत्य नीयतां वसनं वः सुदृशो यथायथम् ।
इति नर्ममृदुस्मिते त्वयि ब्रुवति व्यामुमुहे वधूजनैः ॥ ६

सुदृशः इह तावत् उपेत्य 'கட்டழகிகளே! இவ்விடமே வந்து
वः वसनं உங்களுடைய ஆடை
यथायथं नीयतां மாறுடாமல் கொண்டுபோகப்படட்டும்'
इति त्वयि नर्ममृदुस्मिते என்று தாங்கள் பரிஹாஸமாக சிரித்துக்கொண்டு
ब्रुवति वधूजनैः சொல்லும்பொழுது அந்த கோபிகைகளால்
व्यामुमुहे என்ன செய்யவேண்டுமென்றறியாமல் மோஹமடையப் பட்டதல்லவா.

अयि जीव चिरं किशोर नस्तव दासीरवशीकरोषि किम् ।
प्रदिशाम्बरमम्बुजेक्षणेत्युदितस्त्वं स्मितमेव दत्तवान् ॥ ७

| | |
|---|---|
| अयि किशोर | 'ஹே குழந்தாய்! (விவாஹமாகாதவனே!) |
| चिरं जीव | நீ நெடுநாள் வாழவேண்டும்; |
| तव दासीः नः | தங்கள் பணிப்பெண்களான (பிரேமத்துக்குரியவர்களான) எங்களை |
| किं अवशीकरोषि | ஏன் பரவசப்படுத்துகிறாய்? (ஏன் தன் வசமாக்கிக் கொள்ளுவதில்லை?) |
| अम्बुजेक्षण | ஹே தாமரைக்கண்ணா! |
| अम्बरं प्रदिश | (கணவன் கொடுக்கவேண்டியதான) வஸ்திரத்தைக் [கொடு' |
| इति उदितः त्वं | என்று கூறப்பட்ட தாங்கள் |
| स्मितं एव दत्तवान् | (வஸ்திரத்தைக் கொடுக்காமல்) மந்தஹாஸத்தை மட்டும் கொடுத்தீர்களல்லவா. |

अधिरुह्य तटं कृताञ्जलीः परिशुद्धाः स्वगतीर्निरीक्ष्य ताः ।
वसनान्यखिलान्यनुग्रहं पुनरेवं गिरमप्यदा मुदा ॥ ८

| | |
|---|---|
| तटं अधिरुह्य कृताञ्जलीः | கரையில் ஏறிக் கும்பிட்டு வணங்கியவர்களும் |
| परिशुद्धाः | அதனால் பரிசுத்தைகளும், |
| स्वगतीः | தம்மையே சரணமடைந்தவர்களுமான |
| ताः निरीक्ष्य मुदा | அவர்களைப்பார்த்து மிக சந்தோஷத்துடன் |
| अखिलानि वसनानि | எல்லா வஸ்திரங்களையும், |
| पुनः अनुग्रहं | பிறகு அனுக்கிரஹரூபமான |
| एवं गिरं अपि | பின்வரும் ஒரு வசனத்தையும் |
| अदाः | தந்தருளினீர்களல்லவா. |

विदितं ननु वो मनीषितं वदितारस्त्विह योग्यमुत्तरम् ।
यमुनापुलिने सचन्द्रिकाः क्षणदा इत्यबलास्त्वमूचिवान् ॥ ९

| | |
|---|---|
| ननु वः मनीषितं | "ஓ! பெண்களே! உங்கள் விருப்பம் |
| विदितं | என்னால் அறியப்பட்டது; |
| तु इह योग्यं उत्तरं | ஆனால் இதற்குத் தகுந்த பதிலை |
| यमुनापुलिने | யமுனாநதியின் மணல் திட்டில் |
| सचन्द्रिकाः क्षणदाः | நிலாவுடன்கூடின இரவுகள் |
| वदितारः इति त्वं | சொல்லும்" என்று தாங்கள் |
| अबलाः ऊचिवान् | பெண்மணிகளிடம் சொன்னீர்களல்லவா. |

उपकर्ण्य भवन्मुखच्युतं मधुनिष्यन्दि वचो मृगीदृशः ।
प्रणयादयि वीक्ष्य वीक्ष्य ते वदनाब्जं शनकैर्गृहं गताः ॥ १०

अयि मृगीदृशः பகவானே! அந்த மான்கண்ணிகள்
भवन्मुखच्युतं தங்கள் திருமுகத்திலிருந்து வெளிவந்த
मधुनिष्यन्दि वचः उपकर्ण्य தேனைப்பெருக்குகிற திருவாக்கைக்கேட்டு,
प्रणयात् ते वदनाब्जं பிரேமையால் தங்கள் வதனாரவிந்தத்தை
वीक्ष्य वीक्ष्य திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டு
शनकैः गृहं गताः மெள்ளமெள்ள வீட்டிற்குச் சென்றனரல்லவா.

इति नन्वनुगृह्य वल्लवीर्विपिनान्तेषु पुरेव सञ्चरन् ।
करुणाशिशिरो हरे हर त्वरया मे सकलामयावलिम् ॥ ११

ननु हरे इति ஹே ஸ்ரீஹரே! இவ்விதம்
वल्लवीः अनुगृह्य पुरा इव கோபிகைகளை அனுக்கிரஹித்து முன்போலவே
विपिनान्तेषु सञ्चरन् காடுகளில் சுற்றிக்கொண்டிருக்கும்
करुणाशिशिरः கருணையால் கனிந்த தாங்கள்
मे सकलामयावलिं எனது எல்லா வியாதிக்கூட்டத்தையும்
त्वरया हर சீக்கிரமாகப் போக்கவேண்டும்.

इति श्रीमन्नारायणीये गोपीवस्त्रापहारवर्णनं नाम षष्टितमं दशकं सैकम् ॥ ६० ॥

आदितः श्लोकाः 618.  दशमस्कन्धे श्लोकाः 243.

## एकषष्टितमं दशकम्—அறுபத்தோராவது தசகம்.

यज्ञपत्न्युद्धरणवर्णनम्—தீக்ஷிதபத்னிக்கு மோக்ஷங்கொடுத்ததை வர்ணிப்பது.

ततश्च बृन्दावनतोऽतिदूरतो वनं गतस्त्वं खलु गोपगोकुलैः ।
हृदन्तरे भक्ततरद्विजाङ्गनाकदम्बकानुग्रहणाग्रहं वहन् ॥ १

ततः च त्वं हृदन्तरे அதன் பிறகு தாங்கள் மனதினுள்
भक्ततरद्विजाङ्गना- कदम्बकानुग्रहणाग्रहं } தம்முடைய பக்தசிரேஷ்டைகளான பிராம்மணப் பெண்மணிகளை அனுக்கிரஹிக்கும் விருப்பத்தை
वहन् வைத்துக்கொண்டு,
गोपगोकुलैः கோபாலர்களுடனும் பசுக்கூட்டங்களுடனும்
बृन्दावनतः பிருந்தாவனத்திலிருந்து
अतिदूरतः वनं வெகுதூரத்திலிருக்கும் காட்டிற்கு
गतः खलु சென்றீர்களல்லவா.

ततो निरीक्ष्याशरणे वनान्तरे किशोरलोकं क्षुधितं तृषाकुलम् ।
अदूरतो यज्ञपरान् द्विजान्प्रति व्यसर्जयो दीदिवियाचनाय तान् ॥ २

ततः अशरणे பிறகு வீடு (புகலிடம்) ஒன்றுமில்லாத
वनान्तरे किशोरलोकं காட்டின் நடுவில் கோபகுமாரர்களை
क्षुधितं பசியுடையவர்களாகவும்

| | |
|---|---|
| **तृषाकुलं निरीक्ष्य** | *தாகத்தால் வருந்தினவர்களாகவும் கண்டு,* |
| **अदूरतः यज्ञपरान्** | *பக்கத்தில் யாகத்தில் ஈடுபட்டிருக்கும்* |
| **द्विजान् प्रति** | *பிராம்மணர்களிடத்தில்* |
| **दीदिवियाचनाय** | *அன்னத்தை யாசிப்பதற்காக* |
| **तान् व्यसर्जयः** | *அவர்களை அனுப்பினீர்களல்லவா.* |

गतेष्वथो तेष्वभिधाय तेऽभिधां कुमारकेष्वोदनयाचिषु प्रभो ।
श्रुतिस्थिरा अप्यभिनिन्युरश्रुतिं न किञ्चिदूचुश्च महीसुरोत्तमाः ॥ ३

| | |
|---|---|
| **प्रभो अथो** | *ஹே பிரபுவே! அதன் பிறகு அவ்விதம்* |
| **गतेषु तेषु कुमारकेषु** | *சென்ற அந்தச் சிறுவர்கள்* |
| **ते अभिधां अभिधाय** | *தங்கள் திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு* |
| **ओदनयाचिषु** | *அன்னத்தை யாசிக்கும்பொழுது* |
| **महीसुरोत्तमाः** | *அந்தப் பிராம்மணோத்தமர்கள்* |
| **श्रुतिस्थिराः अपि** | *வேதங்களை நன்கறிந்தவர்களாக இருந்தாலும் (நன்றாக காது கேட்பவர்களாக இருந்தாலும்)* |
| **अश्रुतिं** | *வேதங்கள் அறியாமையை (காது கேட்காமலிருப்பதை)* |
| **अभिनिन्युः** | *அபிநயித்தார்கள்.* |
| **किञ्चित् न ऊचुः च** | *ஒன்றும் பதில் சொல்லவும் இல்லை.* |

अनादरात् खिन्नधियो हि बालकाः समाययुर्युक्तमिदं हि यज्वसु ।
चिरादभक्ताः खलु ते महीसुराः कथं हि भक्तं त्वयि तैः समर्प्यते ॥ ४

| | |
|---|---|
| **बालकाः अनादरात्** | *அச்சிறுவர்கள் அவர்கள் அனாதரவு செய்ததால்* |
| **खिन्नधियः** | *வருந்தின மனமுடையவர்களாய்* |
| **समाययुः** | *திரும்பிவந்தார்களல்லவா.* |
| **यज्वसु** | *விதிபோல யாகமனுஷ்டிக்கும் தீக்ஷிதர்களிடத்தில்* |
| **इदं युक्तं** | *அனாதரவு செய்வதென்பது யுக்தந்தான்.* |
| **हि ते महीसुराः चिरात्** | *ஏனென்றால் அந்த பூதேவர்கள் வெகுகாலமாகவே* |
| **अभक्ताः खलु** | *தங்களிடத்தில் பக்தியில்லாதவர்கள் (அன்னமில்லாதவர்கள்) அல்லவா.* |
| **तैः** | *அப்படிப்பட்ட அவர்களால்* |
| **त्वयि भक्तं** | *தங்களிடத்தில் அன்னம் (பக்தி)* |
| **कथं हि समर्प्यते** | *எவ்விதந்தான் கொடுக்கப்படும் (செலுத்தப்படும்).* |

निवेदयध्वं गृहिणीजनाय मां दिशेयुरन्नं करुणाकुला इमाः ।
इति स्मितार्द्रं भवतेरिता गतास्ते दारका दारजनं ययाचिरे ॥ ५

| | |
|---|---|
| **गृहिणीजनाय** | *" தீக்ஷிதபத்னிகளிடத்தில்* |
| **मां निवेदयध्वं** | *என்னைப்பற்றித் தெரிவியுங்கள்,* |
| **करुणाकुलाः इमाः** | *கருணைகூர்ந்த அவர்கள்* |

| | |
|---|---|
| अन्नं दिशेयुः | அன்னத்தைக் கொடுப்பார்கள்” |
| इति स्मितार्द्रं भवता ईरिताः | என்று புன்னகையுடன் தங்களால் கூறப்பட்ட |
| ते दारकाः गताः दारजनं | அச்சிறுவர்கள் சென்று தீக்ஷிதபத்தினிகளிடத்தில் |
| ययाचिरे | அன்னத்தை யாசித்தனர். |

गृहीतनाम्नि त्वयि संभ्रमाकुलाश्चतुर्विधं भोज्यरसं प्रगृह्य ताः ।
चिरं धृतत्वत्प्रविलोकनाग्रहाः स्वकैर्निरुद्धा अपि तूर्णमाययुः ॥ ६

| | |
|---|---|
| त्वयि गृहीतनाम्नि | தங்கள் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் |
| चिरं धृतत्वत्प्रवि-लोकनाग्रहाः ताः | வெகுகாலமாக தங்களை தரிசிக்கவேண்டுமென்ற ஆவலை யுடையவர்களான அந்த தீக்ஷிதபத்தினிகள் |
| संभ्रमाकुलाः | பரபரப்படைந்தவர்களாக |
| चतुर्विधं | (காத்யம், சோஷ்யம், லேஹ்யம், பேயம் என்று) நான்கு விதமான |
| भोज्यरसं प्रगृह्य | பக்ஷணத்தையெடுத்துக்கொண்டு |
| स्वकैः | தங்கள் கணவர் முதலியவர்களால் |
| निरुद्धाः अपि | தகையப்பட்டவர்களாக இருந்தும் |
| तूर्णं आययुः | விரைவாக வந்தனர். |

विलोलपिञ्छं चिकुरे कपोलयोः समुल्लसत्कुण्डलमार्द्रमीक्षिते ।
निधाय बाहुं सुहृदंससीमनि स्थितं भवन्तं समलोकयन्त ताः ॥ ७

| | |
|---|---|
| चिकुरे विलोलपिञ्छं | கொண்டையில் சலிக்கின்ற மயிற்றோகையுடையவரும், |
| कपोलयोः | இரு கன்னங்களிலும் |
| समुल्लसत्कुण्डलं | நன்கு பிரகாசிக்கின்ற குண்டலங்களையுடையவரும், |
| ईक्षिते आर्द्रं | கடைக்கண்ணில் கனிவுள்ளவரும், |
| सुहृदंससीमनि | தோழனின் தோளில் |
| बाहुं निधाय स्थितं भवन्तं | கை வைத்துக்கொண்டு நிற்பவருமான தங்களை |
| ताः समलोकयन्त | அவர் கண்டனர். |

तदा च काचित्त्वदुपागमोद्यता गृहीतहस्ता दयितेन यज्वना ।
तदैव सञ्चिन्त्य भवन्तमञ्जसा विवेश कैवल्यमहो कृतिन्यसौ ॥ ८

| | |
|---|---|
| तदा च | மற்றவர்களெல்லாம் சென்றபொழுது |
| त्वदुपागमोद्यता काचित् | தங்களிடம் வர யத்தனித்த ஒருவள் |
| यज्वना दयितेन | தீக்ஷிதனான கணவனால் |
| गृहीतहस्ता | கைகளில் பிடித்துக்கொண்டு தகையப்பட்டவளாய் |
| भवन्तं सञ्चिन्त्य तदा एव | தங்களை தியானித்துக்கொண்டு தத்க்ஷணமே |
| अञ्जसा कैवल्यं विवेश | சிரமமில்லாமல் மோக்ஷத்தையடைந்தாள். |
| अहो असौ कृतिनी | ஆச்சரியம்! அவளன்றோ பாக்கியவதி. |

आदाय भोज्यान्यनुगृह्य ताः पुनस्त्वदङ्गसङ्गस्पृहयोज्झतीर्गृहम् ।
विलोक्य यज्ञाय विसर्जयन्निमाश्चकर्थ भर्तृनपि तास्वगर्हणान् ॥ ९

| | |
|---|---|
| भोज्यानि आदाय | பக்ஷணங்களை அங்கீகரித்துக்கொண்டு |
| ताः अनुगृह्य पुनः | அவர்களையனுக்கிரகித்து பிறகு |
| त्वदङ्गसङ्गस्पृहया | தங்களுடைய அங்கசங்கத்தில் விருப்பத்தால் |
| गृहं उज्झतीः विलोक्य | அவர்களை வீடுகளையும் உபேக்ஷித்தவர்களாகக் கண்டு, |
| यज्ञाय | யாகத்தை நிறைவேற்றுவதற்காக |
| इमाः विसर्जयन् | அவர்களை சொல்லியனுப்பி |
| भर्तृन् अपि | அவர்களுடைய கணவர்களையும் |
| तासु अगर्हणान् | அவர்களிடம் தீய எண்ணமற்றவர்களாக |
| चकर्थ | செய்தீர்களல்லவா. |

निरूप्य दोषं निजमङ्गनाजने विलोक्य भक्तिं च पुनर्विचारिभिः ।
प्रबुद्धतत्त्वैस्त्वमभिष्टुतो द्विजैर्मरुत्पुराधीश निरुन्धि मे गदान् ॥ १०

| | |
|---|---|
| मरुत्पुराधीश | ஹே குருவாயூரப்பா ! |
| निजं दोषं निरूप्य | தங்கள் தோஷத்தை நிரூபித்துப் பார்த்தும், |
| अङ्गनाजने | தங்கள் பத்தினிகளிடத்தில் இருக்கும் |
| भक्तिं विलोक्य च | பக்தியைக் கண்டும் |
| पुनः विचारिभिः | பிறகு விசாரஞ்செய்தவர்களும், |
| प्रबुद्धतत्त्वैः | அதனால் உண்மையை அறிந்தவர்களுமான |
| द्विजैः अभिष्टुतः त्वं | அந்தணர்களால் நன்கு ஸ்துதிக்கப்பட்ட தாங்கள் |
| मे गदान् निरुन्धि | என் வியாதிகளைத் தடுக்கவேண்டும். |

इति श्रीमन्नारायणीये यज्ञपत्न्युद्धरणवर्णनं नाम एकषष्टितमं दशकम् ॥ ६१ ॥

आदितः श्लोकाः 628 दशमस्कन्धे श्लोकाः 253.

## द्विषष्टितमं दशकम्— அறுபத்திரண்டாவது தசகம்.

### इन्द्रयागविघातवर्णनम्— இந்திரயாகத்தைக் கெடுத்ததை வர்ணிப்பது.

कदाचिद्गोपालान्विहितमखसंभारविभवान्
निरीक्ष्य त्वं शौरे मघवमदमुध्वंसितुमनाः ।
विजानन्नप्येतान्विनयमृदु नन्दादिपशुपा-
नपृच्छः को वाऽयं जनक भवतामुद्यम इति ॥ १

| | |
|---|---|
| शौरे कदाचित् त्वं | ஹே ஸ்ரீகிருஷ்ணா! ஒருநாள் தாங்கள் |
| गोपालान् | கோபாலர்களை |
| विहितमखसंभार-विभवान् निरीक्ष्य | யாகத்திற்கு வேண்டிய பண்டங்களை சம்பாதிப்பதில் ஈடுபட்டவர்களாகக் கண்டு, |

मघवमदं उध्वंसितुमनाः இந்திரன் செருக்கை ஒழிக்க எண்ணியவராய்
विजानन् अपि அறிந்திருந்தும்கூட
जनक भवतां अयं उद्यमः " அப்பா! உங்களுடைய இம்முயற்சி
कः वा इति विनयमृदु என்ன" என்று வணக்கத்துடன் மெதுவாக
एतान् नन्दादिपशुपान् அந்த நந்தன் முதலிய கோபர்களிடம்
अपृच्छः கேட்டீர்களல்லவா.

बभाषे नन्दस्त्वां सुत ननु विधेयो मघवतो
मखो वर्षे वर्षे सुखयति स वर्षेण पृथिवीम् ।
नृणां वर्षायत्तं निखिलमुपजीव्यं महितले
विशेषादस्माकं तृणसलिलजीवा हि पशवः ॥ २

सुत वर्षे वर्षे " பிள்ளாய்! ஒவ்வொரு வருஷமும்
मघवतः मखः विधेयः ननु இந்திரயாகம் செய்தே தீரவேண்டும்.
सः वर्षेण இந்திரன் மழையால்
पृथिवीं सुखयति பூமியை சுகப்படுத்துகிறான்.
महितले नृणां பூலோகத்திலுள்ள மனிதர்களுடைய
निखिलं उपजीव्यं உபஜீவனமார்க்கமெல்லாம்
वर्षायत्तं மழையையாசிரயித்திருக்கிறது.
विशेषात् अस्माकं விசேஷமாக நமக்கும் மழைதான் ஆசிரயம்.
हि पशवः ஏனென்றால் பசுக்கள்
तृणसलिलजीवाः புல்லையும் ஜலத்தையும் ஜீவனாக உடையவைகள்" என்று
नन्दः त्वां बभाषे நந்தன் தங்களிடம் உரைத்தானல்லவா.

इति श्रुत्वा वाचं पितुरयि भवानाह सरसं
धिगेतन्नो सत्यं मघवजनिता वृष्टिरिति यत् ।
अदृष्टं जीवानां सृजति खलु वृष्टिं समुचितां
महारण्ये वृक्षाः किमिव बलिमिन्द्राय ददते ॥ ३

अयि पितुः ஹே ஸ்ரீகிருஷ்ணா! பிதாவினுடைய
इति वाचं श्रुत्वा भवान् இப்படிப்பட்ட வாக்கைக் கேட்டு, தாங்கள்
धिक् वृष्टिः मघवजनिता " கஷ்டம்! மழை இந்திரனால் உண்டுபண்ணப்பட்டது
इति यत् एतत् नो सत्यं என்று யாதொன்றுண்டோ இது உண்மையேயல்ல;
जीवानां अदृष्टं खलु பிராணிகளுடைய அதிருஷ்டமல்லவா
समुचितां वृष्टिं सृजति வேண்டிய மழையையுண்டுபண்ணுகிறது?
महारण्ये वृक्षाः பெருங்காடுகளில் மரங்கள்
इन्द्राय बलिं किमिव ददते இந்திரனுக்கு பலியை கொடுக்கின்றனவா"? என்று
सरसं आह ஸரஸமாக உரைத்தீர்களல்லவா.

इदं तावत्सत्यं यदिह पशवो नः कुलधनं
तदाजीव्यायासौ बलिरचलभर्त्रे समुचितः ।
सुरेभ्योऽप्युत्कृष्टा ननु धरणिदेवाः क्षितितले
ततस्तेऽप्याराध्या इति जगदिथ त्वं निजजनान् ॥ ४

**इह पशवः नः कुलधनं** "இவ்விடத்தில் பசுக்கள் நமது குலதனம்
**यत् इदं तावत् सत्यं** என்பதுதான் உண்மை.
**असौ बलिः** இந்த பலி (யாகம்)
**तदाजीव्याय** அவைகளுக்கு உபஜீவனத்திற்குக் காரணமான
**अचलभर्त्रे समुचितः** மலையரசுக்கு கொடுப்பதுதான் உசிதம்.
**क्षितितले धरणिदेवाः** பூலோகத்தில் அந்தணர்கள்
**सुरेभ्यः अपि** தேவர்களைக்காட்டிலும்
**उत्कृष्टाः ननु** மேன்மைபெற்றவர்களன்றோ ;
**ततः ते अपि आराध्याः** ஆகையால் அவர்களும் ஆராதிக்கத்தகுந்தவர்களே "
**इति त्वं** என்று தாங்கள்
**निजजनान् जगदिथ** தங்கள் பந்துக்களிடம் உரைத்தீர்களல்லவா.

भवद्वाचं श्रुत्वा बहुमतियुतास्तेऽपि पशुपाः
द्विजेन्द्रानर्चन्तो बलिमददुरुच्चैः क्षितिभृते ।
व्यधुः प्रादक्षिण्यं सुभृशमनमन्नादरयुता-
स्त्वमादः शैलात्मा बलिमखिलमाभीरपुरतः ॥ ५

**ते पशुपाः अपि** அந்த கோபாலர்களும்
**भवद्वाचं श्रुत्वा** தங்கள் திருவாக்கைக் கேட்டு
**बहुमतियुताः** வெகுமானத்துடன் கூடினவர்களாக
**द्विजेन्द्रान् अर्चन्तः** பிராமணோத்தமர்களை பூஜித்துக்கொண்டு.
**क्षितिभृते उच्चैः बलिं अददुः** மலைக்கு உயர்ந்த பலியைக் கொடுத்தனர்.
**सुभृशं आदरयुताः** மிகவும் ஆதரவுடையவர்களாய்
**प्रादक्षिण्यं व्यधुः अनमन्** வலம் வந்தனர் ; வணங்கினர்.
**शैलात्मा त्वं आभीरपुरतः** மலைருபியாகத் தாங்களும் கோபாலர்களுக்கெதிரில்
**अखिलं बलिं आदः** பலி முழுவதையும் பக்ஷித்தீர்களல்லவா.

अवोचश्चैवं तान् किमिह वितथं मे निगदितं
गिरीन्द्रो नन्वेष स्वबलिमुपभुङ्क्ते स्ववपुषा ।
अयं गोत्रो गोत्रद्विषि च कुपिते रक्षितुमलं
समस्तानित्युक्ता जहृषुरखिला गोकुलजुषः ॥ ६

इह मे निगदितं वितथं किं “இப்பொழுது என் வாக்கு வீணாக ஆனதா ?
एषः गिरीन्द्रः स्ववपुषा இந்த மாமலை தன் சரீரத்துடன்
स्वबलिं उपभुङ्क्ते ननु தனக்கிட்ட பலியை சாப்பிடவில்லையா ”
एवं तान् अवोचः च என்று அவர்களைப்பார்த்து உரைத்தீர்களல்லவா.
गोत्रद्विषि कुपिते च மலைகளின் பகைவனான இந்திரன் கோபமடைந்தாலும்
अयं गोत्रः பூமியை (பசுக்களை)க்காக்கும் இம்மலை
समस्तान् रक्षितुं अलं நம்மெல்லோரையும் காப்பாற்ற சக்தியுற்றதே ”
इति उक्ताः गोकुलजुषः என்று கூறப்பட்ட கோகுலவாஸிகள்
अखिलाः जहृषुः எல்லோரும் சந்தோஷித்தனரல்லவா.

परिप्रीता याताः खलु भवदुपेता व्रजजुषो
व्रजं यावत्तावन्निजमखविभङ्गं निशमयन् ।
भवन्तं जानन्नप्यधिकरजसाऽऽक्रान्तहृदयो
न सेहे देवेन्द्रस्त्वदुपरचितात्मोन्नतिरपि ॥ ७

व्रजजुषः परिप्रीताः கோகுலவாஸிகள் மிக சந்தோஷமடைந்தவர்களாய்
भवदुपेताः தங்களுடன்
यावत् व्रजं याताः எப்பொழுது கோகுலத்திற்குச்சென்றனரோ ;
तावत् खलु देवेन्द्रः अப்பொழுதே தேவேந்திரன்
निजमखविभङ्गं निशमयन् தனது யாகம் தடைபெற்றதையறிந்து
भवन्तं जानन् अपि தங்களைப்பற்றி அறிந்திருந்தும்
त्वदुपरचितात्मोन्नतिः अपि } தங்களாலேயே அளிக்கப்பட்ட தன்னுடைய உயர்ந்த இந்திரபதவியையுடையவனாக இருந்தும்
अधिकरजसा आक्रान्तहृदयः न सेहे } அதிகமான ரஜோகுணத்தால் சூழப்பட்ட மனதையுடையவனாக பொறுக்கவில்லை.

मनुष्यत्वं यातो मधुभिदपि देवेष्वविनयं
विधत्ते चेन्नष्टस्त्रिदशसदसां कोऽपि महिमा ।
ततश्च ध्वंसिष्ये पशुपहतकस्य श्रियमिति
प्रवृत्तस्त्वां जेतुं स किल मघवा दुर्मदनिधिः ॥ ८

मधुभित् अपि “மதுவைக் கொன்ற விஷ்ணுகூட
मनुष्यत्वं यातः மனுஷ்யத்தன்மையையடைந்தவராய்
देवेषु अविनयं विधत्ते चेत् தேவர்களிடத்தில் அபராதத்தை செய்வாராகில்,
त्रिदशसदसां ஸமஸ்த தேவர்களுடையவும்
कः अपि महिमा இவ்விதமென்று சொல்லமுடியாத மஹிமை
नष्टः நாசமடைந்துவிட்டது.
ततः च पशुपहतकस्य ஆகையால் இடையப்பதரான க்ருஷ்ணனுடைய

श्रियं ध्वंसिष्ये इति　ஐசுவரியத்தை நாசஞ்செய்கிறேன்" என்று
दुर्मदनिधिः सः मघवा　வீண் செருக்கிற்கிருப்பிடமான அந்த இந்திரன்
त्वां विजेतुं प्रवृत्तः किल　தங்களை ஜயிக்க துணிந்தானல்லவா.

त्वदावासं हन्तुं प्रलयजलदानम्बरभुवि
प्रहिण्वन् बिभ्राणः कुलिशमयमभ्रेभगमनः ।
प्रतस्थेऽन्यैरन्तर्दहनमरुदाद्यैर्विहसितो
भवन्माया नैव त्रिभुवनपते मोहयति कम् ॥　९

अयं त्वदावासं हन्तुं　அந்த இந்திரன் தங்கள் இருப்பிடத்தையழிப்பதற்கு
अभ्रेभगमनः　ஐராவதத்தின்மேலேறிக்கொண்டு
कुलिशं बिभ्राणः　வஜ்ராயுதத்தை கையிலெடுத்துக்கொண்டு
अम्बरभुवि　ஆகாயத்தில்
प्रलयजलदान् प्रहिण्वन्　பிரளயகாலத்துமேகங்களை ஏவிக்கொண்டு
अन्यैः दहनमरुदाद्यैः　மற்ற அக்னி வாயு முதலியவர்களால்
अन्तः विहसितः　உள்ளில் பரிஹஸிக்கப்பட்டவனாய்
प्रतस्थे　புறப்பட்டானல்லவா.
त्रिभुवनपते　மூவுலகங்களுக்கும் அதிபதியான ஹே கிருஷ்ணா!
भवन्माया कं एव न मोहयति　தங்கள் மாயை யாரைத்தான் மயக்குவதில்லை.

सुरेन्द्रः क्रुद्धश्चेद् द्विजकरुणया शैलकृपयाऽ-
प्यनातङ्कोऽस्माकं नियत इति विश्वास्य पशुपान् ।
अहो किन्नायातो गिरिभिदिति सञ्चिन्त्य निवसन्
मरुद्गेहाधीश प्रणुद मुरवैरिन् मम गदान् ॥　१०

सुरेन्द्रः क्रुद्धः चेत्　'தேவேந்திரன் கோபமடைந்தானாகிலும்
द्विजकरुणया　பிராமணர்களுடைய கருணையாலும்
शैलकृपया अस्माकं　மலையின் அருளாலும் நமக்கு
अनातङ्कः नियतः इति　க்ஷேமம் நிச்சயம்' என்று
पशुपान् विश्वास्य　கோபாலர்களை நம்பச்செய்து
अहो गिरिभित्　'ஆச்சரியம்! இந்திரன்
किं न आयातः　ஏன் வரவில்லை'
इति सञ्चिन्त्य　என்றுலோசித்துக்கொண்டு
निवसन् मुरवैरिन्　காத்திருக்கும் முரவைரியான
मरुद्गेहाधीश　ஹே குருவாயூரப்பா!
मम गदान् प्रणुद　என் வியாதிகளை தாங்கள் அகற்றவேண்டும்.

इति श्रीमन्नारायणीये इन्द्रयागविघातवर्णनं नाम द्विषष्टितमं दशकम् ॥ ६२ ॥
आदितः श्लोकाः 638.　　दशमस्कन्धे श्लोकाः 263.

## त्रिषष्टितमं दशकम्— *அறுபத்துமூன்றாவது தசகம்.*

**गोवर्धनोद्धारणवर्णनम्**— கோவர்த்தனோத்தரணத்தை வர்ணிப்பது.

ददृशिरे किल तत्क्षणमक्षतस्तनितजृंभितकम्पितदिक्तटाः ।
सुषमया भवदङ्गतुलां गता व्रजपदोपरि वारिधरास्त्वया ॥ १

**तत्क्षणं व्रजपदोपरि** *அப்பொழுதே கோகுலத்திற்கு மேல்*
**अक्षतस्तनितजृंभित-कम्पितदिक्तटाः** *இடைவிடாதுண்டான இடி முழக்கத்தால் நடுங்கச் செய்த திக்குகளையுடையனவும்*
**सुषमया भवदङ्गतुलां गताः** *நிறத்தால் தங்கள் திருமேனிக்கொத்தவையுமான*
**वारिधराः त्वया ददृशिरे किल** *மேகங்கள் தங்களால் காணப்பட்டனவல்லவா.*

विपुलकरकमिश्रैस्तोयधारानिपातै-
दिशि दिशि पशुपानां मण्डले दण्ड्यमाने ।
कुपितहरिकृतान्नः पाहि पाहीति तेषां
वचनमजित शृण्वन् मा बिभीतेत्यभाणीः ॥ २

**अजित** *ஒருவராலும் ஜயிக்கப்படாத ஹே கிருஷ்ண!*
**विपुलकरकमिश्रैः** *பெருத்த ஆலங்கட்டிகளுடன் கூடின*
**तोयधारानिपातैः** *மழைத்தாரைகளின் வீழ்ச்சிகளால்*
**दिशि दिशि पशुपानां मण्डले** *எல்லா இடத்திலும் இடையர் கூட்டம்*
**दण्ड्यमाने** *தண்டிக்கப்படும்பொழுது,*
**कुपितहरिकृतात्** *"கோபமடைந்த இந்திரனுடைய துரோகத்திலிருந்து*
**नः पाहि पाहि** *எங்களைக் காப்பாற்று, காப்பாற்று"*
**इति तेषां वचनं** *என்ற அவர்களுடைய வசனத்தை*
**शृण्वन् त्वं** *கேட்டுக்கொண்டிருந்த தாங்கள்*
**मा बिभीत इति** *'பயப்படாதீர்கள்' என்று*
**अभाणीः** *உரைத்தீர்களல்லவா.*

कुल इह खलु गोत्रो दैवतं गोत्रशत्रो-
र्विहितमिह स रुन्ध्यात्को नु वः संशयोऽस्मिन् ।
इति सहसितवादी देव गोवर्धनाद्रिं
त्वरितमुदमुमूलो मूलतो बालदोर्भ्याम् ॥ ३

**इह कुले** *'இந்த கோகுலத்தில்*
**गोत्रः खलु** *பசுக்களைக் காப்பாற்றும் கோவர்த்தனமலையல்லவா*
**दैवतं** *தைவதம்?*
**सः** *அம்மலை*

गोत्रशत्रोः மலைகளுக்குப்பகைவனை இந்திரனிடமிருந்துண்டான
इह विहतिं रुन्ध्याम् இக்கெடுதியை தகையும்;
अस्मिन् वः कः नु संशयः இதில் உங்களுக்கு என்ன ஸந்தேகம்?'
देव इति பிரகாசரூபியே! இவ்விதம்
सहसितवादी त्वरितं சிரிப்புடன் சொல்லிக்கொண்டே விரைவாக
बालदोर्भ्यां गोवर्धनाद्रिं இளங்கைகளால் கோவர்த்தன மலையை
मूलतः उदमुमूलः வேருடன் பிடுங்கியெடுத்தீர்களல்லவா.

तदनु गिरिवरस्य प्रोद्धृतस्यास्य तावत्
सिकतिलमृदुदेशे दूरतो वारितापे ।
परिकरपरिमिश्रान् धेनुगोपानधस्ता-
दुपनिदधदधत्था हस्तपद्मेन शैलम् ॥ ४

तदनु तावत् प्रोद्धृतस्य அதன்பிறகு உயரத் தூக்கப்பட்ட
अस्य गिरिवरस्य सिकतिलमृदुदेशे அந்த மாமலையின் மணற்பாங்கானதால் மெதுவாக இருக்கும் இடத்தையுடையதும்
दूरतः वारितापे अधस्तात् வெகுதூரத்தில் தடுக்கப்பட்ட வெள்ளப்பெருக்கையுடையதுமான அடியில்
परिकरपरिमिश्रान् வீட்டுச்சாமான்களுடன் கூடின
धेनुगोपान् उपनिदधत् பசுக்களையும் கோபர்களையும் இருக்கச்செய்து
हस्तपद्मेन தாமரைபோன்ற கையால்
शैलं अधत्थाः மலையைத் தாங்கிக்கொண்டிருந்தீர்களல்லவா.

भवति विधृतशैले बालिकाभिर्वयस्यै-
रपि विहितविलासं केलिलापादिलोले ।
सविधमिलितधेनूरेकहस्तेन कण्डू-
यति सति पशुपालास्तोषमैषन्त सर्वे ॥ ५

भवति विधृतशैले தாங்கள் மலையை தூக்கிக்கொண்டும்,
बालिकाभिः वयस्यैः अपि சிறு பெண்களுடனும், தோழர்களுடனும்,
विहितविलासं லீலாவினயத்துடன் கூட
केलिलापादिलोले விளையாட்டாகப் பேசுவது முதலியவற்றில் ஈடுபட்டுக்கொண்டும்
सविधमिलितधेनूः பக்கத்தில் வந்த பசுக்களை
एकहस्तेन कण्डूयति सति ஒரு கையால் சொரிந்துகொண்டும் இருக்கும்பொழுது
सर्वे पशुपालाः எல்லா கோபாலர்களும்
तोषं ऐषन्त சந்தோஷமடைந்தனரல்லவா.

अतिमहान् गिरिरेष तु वामके करसरोरुहि तं धरते चिरम् ।
किमिदमद्भुतमद्रिबलं न्विति त्वदवलोकिभिराकथि गोपकैः ॥ ६

गिरिः अतिमहान् 'இந்த மலை மிகப்பெரிது;
एषः तु இந்தக் கிருஷ்ணனோ
करसरोरुहि वामके தாமரைபோல மிருதுவான இடது கையில்
तं चिरं धरते அதை நெடுநேரமாக சுமக்கின்றான்;
इदं किं अद्भुतं இதென்ன ஆச்சரியம்!!
अद्रिबलं नु ஒருக்கால் மலையின் சக்தியாக இருக்குமோ'
इति त्वदवलोकिभिः என்று தங்களைப் பார்க்கின்ற
गोपकैः आकथि அறிவில்லாத கோபர்களால் சொல்லப்பட்டதல்லவா.

अहह धाष्टर्यममुष्य वटोर्गिरिं व्यथितबाहुरसाववरोपयेत् ।
इति हरिस्त्वयि बद्धविगर्हणो दिवससप्तकमुग्रमवर्षयत् ॥ ७

अमुष्य वटोः अहह धाष्टर्यं இச்சிறுவனுக்கு என்ன துணிவு!
असौ व्यथितबाहुः இவன் கைவேதனையடைந்தவனாய்
गिरिं अवरोपयेत् மலையை கீழே இறக்கிவைப்பான்,
इति त्वयि என்று தங்களிடத்தில்
बद्धविगर्हणः हरिः நிந்தையுடையவனாய் இந்திரன்
दिवससप्तकं ஏழு நாள் முழுவதும்
उग्रं अवर्षयत् கடுமையாக மழைபெய்யச் செய்தானல்லவா.

अचलति त्वयि देव पदात्पदं गलितसर्वजले च घनोत्करे ।
अपहृते मरुता मरुतां पतिस्त्वदभिशङ्कितधीः समुपाद्रवत् ॥ ८

देव त्वयि पदात् पदं ஹே தேவ! தாங்கள் நின்ற இடத்திலிருந்து ஓரடிகூட
अचलति அசையாதிருந்தபொழுது
गलितसर्वजले घनोत्करे ஜலமெல்லாம் பொழிந்த மேகக்கூட்டமும்
मरुता अपहृते च காற்றால் விரட்டப்பட்டபொழுது
मरुतां पतिः தேவர்களுக்கதிபதியான இந்திரன்
त्वदभिशङ्कितधीः தங்கள் விஷயத்தில் பலவித சங்கை கொண்டவனாய்
समुपाद्रवत् அவ்விடமிருந்து போய்விட்டானல்லவா.

शममुपेयुषि वर्षभरे तदा पशुपधेनुकुले च विनिर्गते ।
भुवि विभो समुपाहितभूधरः प्रमुदितैः पशुपैः परिरेभिषे ॥ ९

तदा वर्षभरे शमं उपेयुषि அப்பொழுது பெருமழை ஓய்ந்தபொழுது
पशुपधेनुकुले च கோபர்களும் பசுக்கூட்டமும்
विनिर्गते வெளியில் வந்தபொழுது
विभो ஸர்வசக்தனான பிரபுவே!
भुवि समुपाहितभूधरः பூமியில் மலையை வைத்த தாங்கள்
प्रमुदितैः மிக சந்தோஷமடைந்த
पशुपैः परिरेभिषे கோபர்களால் கட்டியணைக்கப்பட்டீர்களல்லவா.

धरणिमेव पुरा धृतवानसि क्षितिधरोद्धरणे तव कः श्रमः ।
इति नुतस्त्रिदशैः कमलापते गुरुपुरालय पालय मां गदात् ॥ १०

| | |
|---|---|
| कमलापते गुरुपुरालय | லக்ஷ்மீகாந்தனான ஹே குருவாயூரப்பா! |
| पुरा त्वं धरणिं एव | 'முன்பு தாங்கள் பூமியையே |
| धृतवान् असि | தூக்கியிருக்கிறீர்கள்; |
| तव | அப்படிப்பட்ட தங்களுக்கு |
| क्षितिधरोद्धरणे कः श्रमः | மலையைத் தூக்குவதில் என்ன சிரமம்?' |
| इति त्रिदशैः नुतः | என்று தேவர்களால் ஸ்துதிக்கப்பட்ட தாங்கள் |
| गदात् मां पालय | வியாதியிலிருந்து என்னைக் காப்பாற்றவேண்டும். |

इति श्रीमन्नारायणीये गोवर्धनोद्धारणवर्णनं नाम त्रिषष्टितमं दशकं समाप्तम् ॥६३॥

आदितः श्लोकाः 648  दशमस्कन्धे श्लोकाः 273.

चतुष्षष्टितमं दशकम्—அறுபத்துநான்காவது தசகம்.

गोविन्दपट्टाभिषेकवर्णनम्—கோவிந்தபட்டாபிஷேகவர்ணனம்.

आलोक्य शैलोद्धरणादिरूपं प्रभावमुच्चैस्तव गोपलोकाः ।
विश्वेश्वरं त्वामभिमत्य विश्वे नन्दं भवज्जातकमन्वपृच्छन् ॥ १

| | |
|---|---|
| विश्वे गोपलोकाः | எல்லா கோபாலர்களும் |
| शैलोद्धरणादिरूपं तव | மலையை தூக்கியது முதலான தங்களுடைய |
| उच्चैः प्रभावं आलोक्य | மஹோன்னதமான மஹிமையைக் கண்டு, |
| त्वां विश्वेश्वरं अभिमत्य | தங்களை சர்வேச்வரன் என்றெண்ணி |
| नन्दं भवज्जातकं | நந்தரிடம் தங்கள் ஜாதகத்தைப்பற்றி |
| अन्वपृच्छन् | விசாரித்தனர். |

गर्गोदितो निर्गदितो निजाय वर्गाय तातेन तव प्रभावः ।
पूर्वाधिकस्त्वय्यनुराग एषामैधिष्ट तावद्बहुमानभारः ॥ २

| | |
|---|---|
| गर्गोदितः तव प्रभावः | முன்பு கர்க்கரால் கூறப்பட்ட தங்கள் மஹிமை |
| निजाय वर्गाय तातेन | தன் பந்துக்களுக்கு தங்கள் தகப்பனால் |
| निर्गदितः | எடுத்துரைக்கப்பட்டது; |
| तावत् एषां त्वयि | அது முதல் அவர்களுக்கு தங்களிடத்தில் |
| अनुरागः बहुमानभारः | ப்ரேமையும் (வாத்ஸல்யமும்) வெகுமதியும் |
| पूर्वाधिकः ऐधिष्ट | முந்தியிருந்ததைவிட அதிகமாக விருத்தியடைந்தது. |

ततोऽवमानोदिततत्त्वबोधः सुराधिराजः सह दिव्यगव्या ।
उपेत्य तुष्टाव स नष्टगर्वः स्पृष्ट्वा पदाब्जं मणिमौलिना ते ॥ ३

ततः अवमानोदिततत्त्वबोधः பிறகு அவமானத்தால் உண்மையையறிந்த
सः सुराधिराजः नष्टगर्वः அந்த தேவேந்திரன் கர்வமழிந்தவனாய்
दिव्यगव्या सह उपेत्य காமதேனுவுடன் வந்து
मणिमौलिना ரத்னகிரீடத்தால்
ते पदाब्जं स्पृष्ट्वा தங்கள் சரணாரவிந்தத்தைத் தொட்டு நமஸ்கரித்து
तुष्टाव ஸ்துதித்தானல்லவா.

स्नेहस्नुतैस्त्वां सुरभिः पयोभिर्गोविन्दनामाङ्कितमभ्यषिञ्चत् ।
ऐरावतोपाहृतदिव्यगङ्गापाथोभिरिन्द्रोऽपि च जातहर्षः ॥ ४

सुरभिः காமதேனு
स्नेहस्नुतैः पयोभिः त्वां சிநேகத்தால் பெருகிய பாலைக்கொண்டு தங்களை
गोविन्दनामाङ्कितं 'கோவிந்தன்' என்ற பெயரால் ப்ரஸித்திபெற்றவனாக
अभ्यषिञ्चत् அபிஷேகஞ்செய்தது;
इन्द्रः अपि जातहर्षः இந்திரனுங்கூட சந்தோஷமடைந்தவனாக
ऐरावतोपाहृत- दिव्यगङ्गापाथोभिः ஐராவதத்தால் கொண்டுவரப்பட்ட ஆகாச கங்காஜலத்தால்
अभ्यषिञ्चत च அபிஷேகஞ்செய்யவும் செய்தானல்லவா.

जगत्त्रयीशे त्वयि गोकुलेशे तथाऽभिषिक्ते सति गोपवाटः ।
नाकेऽपि वैकुण्ठपदेऽप्यलभ्यां श्रियं प्रपेदे भवतः प्रभावात् ॥ ५

जगत्त्रयीशे त्वयि மூவுலகங்களுக்கும் நாயகனாகிய தாங்கள்
गोकुलेशे கோகுலத்திற்கு நாயகனாக
तथा अभिषिक्ते सति அவ்விதம் அபிஷேகம் செய்யப்பட்டபொழுது
भवतः प्रभावात् தங்கள் மஹிமையால்
गोपवाटः नाके अपि கோகுலம் ஸ்வர்க்கலோகத்திலும்,
वैकुण्ठपदे अपि வைகுண்டலோகத்திலும்
अलभ्यां श्रियं அடையமுடியாத ஐசுவரியத்தை
प्रपेदे அடைந்ததல்லவா.

कदाचिदन्तर्यमुनं प्रभाते स्नायन् पिता वारुणपूरुषेण ।
नीतस्तमानेतुमगाः पुरीं त्वं तां वारुणीं कारणमर्त्यरूपः ॥ ६

कदाचित् प्रभाते अन्तर्यमुनं ஒரு நாள் ப்ரபாதத்தில் யமுனாஜலத்தில்
स्नायन् पिता ஸ்நானம் பண்ணிக்கொண்டிருந்த தங்கள் பிதா
वारुणपूरुषेण வருணனுடைய ஒரு தூதனால்
नीतः கொண்டுபோகப்பட்டான்.
तं आनेतुं அவரைத் திருப்பி அழைத்து வருவதற்கு
कारणमर्त्यरूपः त्वं காரணவசத்தால் மானிட உருவங்கொண்ட தாங்கள்
तां वारुणीं पुरीं अगाः அந்த வருணலோகத்திற்கு சென்றீர்களல்லவா.

ससंभ्रमं तेन जलाधिपेन प्रपूजितस्त्वं प्रतिगृह्य तातम् ।
उपागतस्तत्क्षणमात्मगेहं पिताऽवदत्तच्चरितं निजेभ्यः ॥ ७

| | |
|---|---|
| जलाधिपेन तेन | ஜலத்திற்கதிபதியான அந்த வருணனால் |
| ससंभ्रमं प्रपूजितः | பரபரப்புடன் நன்கு பூஜிக்கப்பட்ட |
| त्वं तत्क्षणं | தாங்கள் அப்பொழுதே |
| तातं प्रतिगृह्य | தகப்பனைத் திரும்பப் பெற்றுக்கொண்டு, |
| आत्मगेहं उपागतः | தங்கள் இருப்பிடம் வந்து சேர்ந்தீர்களல்லவா; |
| तत् चरितं | அச்சரிதத்தை |
| पिता निजेभ्यः अवदत् | தங்கள் தகப்பன் தன் பந்துக்களுக்கு உரைத்தார். |

हरिं विनिश्चित्य भवन्तमेतान् भवत्पदालोकनबद्धतृष्णान् ।
निरीक्ष्य विष्णो परमं पदं तद्दुरापमन्यैस्त्वमदीदृशस्तान् ॥ ८

| | |
|---|---|
| विष्णो | எங்கும் நிறைந்திருக்கும் ஹே ஈசா! |
| भवन्तं हरिं विनिश्चित्य | தங்களை ஸாக்ஷாத் விஷ்ணு என்று நிச்சயித்துக்கொண்டு |
| भवत्पदालोकन-बद्धतृष्णान् | தங்களுடைய லோகத்தைக் காண ஆசை கொண்டவர்களாக |
| एतान् निरीक्ष्य त्वं | இவர்களைக் கண்டு, தாங்கள் |
| अन्यैः दुरापं | மற்றவர்களால் அடையமுடியாத |
| तत् परमं पदं | அந்தப் பரமபதத்தை |
| तान् अदीदृशः | அவர்களுக்குக் காண்பித்தீர்களல்லவா. |

स्फुरत्परानन्दरसप्रवाहप्रपूर्णकैवल्यमहापयोधौ ।
चिरं निमग्नाः खलु गोपसङ्घास्त्वयैव भूमन् पुनरुद्धृतास्ते ॥ ९

| | |
|---|---|
| भूमन् | ஹே பரிபூர்ணஸ்வரூபியே! |
| ते गोपसङ्घाः | அந்த கோபர்களெல்லாம் |
| स्फुरत्परानन्दरस-प्रवाहप्रपूर्णकैवल्य-महापयोधौ | பிரகாசிக்கின்ற பரமானந்த ரஸத்தின் பெருக்கால் நன்கு நிறைந்த மோக்ஷமாகிற பெருங்கடலில் |
| चिरं निमग्नाः | வெகுநேரம் மூழ்கிவிட்டார்கள். |
| पुनः त्वया एव | மறுபடியும் தங்களாலேயே |
| उद्धृताः खलु | கரையேற்றப்பட்டார்களல்லவா. |

करबदरवदेवं देव कुत्रावतारे निजपदमनवाप्यं दर्शितं भक्तिभाजाम् ।
तदिह पशुपरूपी त्वं हि साक्षात्परात्मा पवनपुरवासिन् पाहि मामामयेभ्यः ॥

| | |
|---|---|
| देव अनवाप्यं | ஹே தேவ! ஒருவராலும் அடையமுடியாத |
| निजपदं कुत्र अवतारे | தங்களுடைய ஸ்தானம் வேறு எந்த அவதாரத்தில் |
| एवं करबदरवत् | இவ்விதம் கையிலிருக்கும் இலந்தைக்கனிபோல |

भक्तिभाजां दर्शितं — பக்தர்களுக்கு காண்பிக்கப்பட்டது?
तत् इह — ஆகையால் இவ்விடத்தில்
पशुपरूपी त्वं — கோபாலரூபியாக இருக்கும் தாங்கள்
हि साक्षात् परात्मा — ஸந்தேஹமில்லாமல் ஸாக்ஷாத் பரமாத்மாவே.
पवनपुरवासिन् — ஹே குருவாயூரப்பா!
मां आमयेभ्यः पाहि — என்னை வியாதிகளிலிருந்து காப்பாற்றவேண்டும்.

इति श्रीमन्नारायणीये गोविन्दाभिषेकवर्णनं नाम चतुःषष्टितमं दशकम् ॥ ६४ ॥

आदितः श्लोकाः 658.  दशमस्कन्धे श्लोकाः 283.

**पञ्चषष्टितमं दशकम्—*அறுபத்தைந்தாவது தசகம்.***

**रासक्रीडायां गोपीनां भगवत्समीपागमनवर्णनम्—**

ராசக்ரீடையில் கோபிகைகள் பகவானிடம் வந்ததை வர்ணிப்பது.

गोपीजनाय कथितं नियमावसाने मारोत्सवं त्वमथ साधयितुं प्रवृत्तः ।
सान्द्रेण चान्द्रमहसा शिशिरीकृताशे प्रापूरयो मुरलिकां यमुनावनान्ते ॥

अथ त्वं नियमावसाने — பிறகு தாங்கள் கௌரீவ்ரதத்தின் முடிவில்
गोपीजनाय कथितं — கோபிகைகளுக்கு பிரதிக்ஞை செய்யப்பட்ட
मारोत्सवं साधयितुं प्रवृत्तः — காமோத்ஸவத்தை நிறைவேற்ற முயன்றவராய்
सान्द्रेण चान्द्रमहसा — நெருக்கமான நிலாவினால்
शिशिरीकृताशे — குளிர்ச்சியுள்ளதாகச்செய்யப்பட்ட
यमुनावनान्ते — யமுனாநதிக்கரையிலுள்ள வனத்தில்
मुरलिकां प्रापूरयः — வேணுநாதஞ்செய்தீர்களல்லவா.

संमूर्च्छनाभिरुदितस्वरमण्डलाभिः संमूर्च्छयन्तमखिलं भुवनान्तरालम् ।
त्वद्वेणुनादमुपकर्ण्य विभो तरुण्यस्तत्तादृशं कमपि चित्तविमोहमापुः ॥

विभो — ஹே ப்ரபுவே!
उदितस्वरमण्डलाभिः — வேணுவிலிருந்து வெளிக்கிளம்பிய ஸ்வரசமூகங்களையுடைய
संमूर्च्छनाभिः — ஸப்தஸ்வரங்களுடைய ஆரோஹணாவரோஹக்ரமங்களால்
अखिलं भुवनान्तरालं — பூலோகம் முழுவதையும்
संमूर्च्छयन्तं — நன்கு மயக்குகின்ற
त्वद्वेणुनादं उपकर्ण्य — தங்களுடைய வேணுநாதத்தைக் கேட்டு,
तरुण्यः — யௌவனப்பெண்கள்
तत्तादृशं कमपि चित्तविमोहं आपुः — உவமையற்றதும் இவ்விதமென்று சொல்லமுடியாததுமான ஒரு மதிமயக்கத்தை அடைந்தனர்.

ता गेहकृत्यनिरतास्तनयप्रसक्ताः कान्तोपसेवनपराश्च सरोरुहाक्ष्यः ।
सर्वं विसृज्य मुरलीरवमोहितास्ते कान्तारदेशमयि कान्ततनो समेताः ॥

अयि कान्ततनो ஹே சுந்தரமூர்த்தியே!
गेहकृत्यनिरताः வீட்டுவேலைகளில் ஈடுபட்டவர்களும்
तनयप्रसक्ताः குழந்தைகளை லாலித்துக்கொண்டிருந்தவர்களும்,
कान्तोपसेवनपराः च பதிசுச்ருஷையில் ஈடுபட்டவர்களுமான
सरोरुहाक्ष्यः ताः ते தாமரைக்கண்ணிகளான அவர்கள் தங்களுடைய
मुरलीरवमोहिताः வேணுநாதத்தால் மயக்கமடைந்தவர்களாய்,
सर्वं विसृज्य எல்லாவற்றையும் விட்டுவிட்டு,
कान्तारदेशं समेताः காட்டிற்கு வந்தார்கள்.

काश्चिन्निजाङ्गपरिभूषणमादधाना वेणुप्रणादमुपकर्ण्य कृतार्धभूषाः ।
त्वामागता ननु तथैव विभूषिताभ्यस्ता एव संरुरुचिरे तव लोचनाय ॥

काश्चित् निजाङ्गपरिभूषणं சிலர் தங்கள் சரீரத்திற்கு அலங்காரத்தை
आदधानाः அணிந்துகொண்டிருக்கும்பொழுது
वेणुप्रणादं उपकर्ण्य வேணுநாதத்தைக் கேட்டு,
कृतार्धभूषाः பகுதியாபரணங்களணிந்தவர்களாய்
तथा एव त्वां आगताः ननु அப்படியே தங்களிடம் வந்தனரல்லவா;
ताः एव அவர்கள்தாமல்லவா
विभूषिताभ्यः நன்கலங்கரித்துக்கொண்டவர்களைவிட
तव लोचनाय தங்கள் கண்ணுக்கு
संरुरुचिरे ப்ரியமானார்கள் (பிடித்தவர்களானார்கள்).

हारं नितम्बभुवि काचन धारयन्ती
काञ्चीं च कण्ठभुवि देव समागता त्वाम् ।
हारित्वमात्मजघनस्य मुकुन्द तुभ्यं
व्यक्तं बभाष इव मुग्धमुखी विशेषात् ॥ ५

देव काचन ஹே தேவ! ஒருத்தி
नितम्बभुवि हारं தனது இடையில் முத்துமாலையையும்,
कण्ठभुवि काञ्चीं च धारयन्ती கழுத்தில் ஒட்டியாணத்தையும் அணிந்துகொண்டு
त्वां समागता தங்களிடம் வந்தாளல்லவா;
मुकुन्द मुग्धमुखी ஹே முகுந்தா! அக்கட்டமுகி
आत्मजघनस्य विशेषात् தன் கடிப்பிரதேசத்தின் விசேஷமான
हारित्वं तुभ्यं மனோஹாரிதையை (முத்துமாலையுடன் கூடியிருக்கும் தன்மையை) தங்களிடம்
व्यक्तं बभाष इव ஸ்பஷ்டமாக உரைத்தாள்போல்.

काचित्कुचे पुनरसज्जितकञ्चुलीका व्यामोहतः परवधूभिरलक्ष्यमाणा ।
त्वामाययौ निरुपमप्रणयातिभारराज्याभिषेकविधये कलशीधरेव ॥ ६

काचित् पुनः कुचे — வேறொருத்தி ஸ்தனங்களில்
व्यामोहतः — மயக்கத்தால்
असज्जितकञ्चुलीका — இரவிக்கையணியாதவளாய்
परवधूभिः अलक्ष्यमाणा — மற்ற ஸ்திரீகளால் காணப்படாதவளாய்
निरुपमप्रणयातिभार-राज्याभिषेकविधये — உவமையற்ற ப்ரேமையாகிற ராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ்செய்வதற்கு
कलशीधरा इव — இரண்டு குடங்களைத் தாங்கியவள்போல
त्वां आययौ — தங்களிடம் வந்தாளல்லவா.

काश्चिद् गृहात्किल निरेतुमपारयन्त्यस्त्वामेव देव हृदये सुदृढं विभाव्य ।
देहं विधूय परचित्सुखरूपमेकं त्वामाविशन् परमिमा ननु धन्यधन्याः ॥

देव काश्चित् — ஹே தேவ! சில கோபிகள்
गृहात् निरेतुं अपारयन्त्यः — வீட்டிலிருந்து வெளிவர முடியாதவர்களாய்
त्वां एव — தங்களையே
हृदये सुदृढं विभाव्य — மனதில் நன்றாக தியானித்துக்கொண்டு
देहं विधूय — சரீரத்தை விட்டுவிட்டு,
परचित्सुखरूपं — ஸச்சிதானந்தரூபியான
एकं त्वां आविशन् किल — இருமையற்ற தங்களையே அடைந்தனரல்லவா;
इमाः ननु परं धन्यधन्याः — இவர்களல்லவா மஹா பாக்கியவதிகள்.

जारात्मना न परमात्मतया स्मरन्त्यो नार्यो गताः परमहंसगतिं क्षणेन ।
तं त्वां प्रकाशपरमात्मतनुं कथञ्चिच्चित्ते वहन्नमृतमश्रममश्नुवीय ॥ ८

नार्यः न परमात्मतया — கோபஸ்திரீகள் பரமாத்மா என்றெண்ணாமல்
जारात्मना — சோரநாயகர் என்றெண்ணத்தாலேயே
स्मरन्त्यः — தங்களையே தியானித்துக்கொண்டு
क्षणेन — ஒரு நொடிப்பொழுதில்
परमहंसगतिं गताः — ஞானிகள் அடையும் மோக்ஷத்தையடைந்தனர்;
प्रकाशपरमात्मतनुं — பிரத்யக்ஷமாக விளங்கும் பரமாத்மஸ்வரூபியாகிய
तं त्वां कथञ्चित् — அந்த தங்களை எவ்விதமாகிலும்
चित्ते वहन् — மனதில் தியானித்துக்கொண்டு
अमृतं अश्रमं अश्नुवीय — மோக்ஷத்தை சிரமமின்றி நான் அடைவேனாக.

अभ्यागताभिरभितो व्रजसुन्दरीभिर्मुग्धस्मितार्द्रवदनः करुणावलोकी ।
निस्सीमकान्तिजलधिस्त्वमवेक्ष्यमाणो विश्वैकहृद्य हर मे परमेश रोगान् ॥

विश्वैकहृद्य — த்ரிலோகசுந்தரனே
परमेश (पवनेश) — ஹே பரமேசுவர! (குருவாயூரப்பா!)
अभ्यागताभिः व्रजसुन्दरीभिः — தங்கள் பக்கத்தில் வந்திருக்கும் கோபிகைகளால்

| | |
|---|---|
| मुग्धस्मितार्द्रवदनः | மனோஹரமான புன்னகையால் கனிந்த முகமுடையவ |
| करुणावलोकी | கருணைகூர்ந்து பார்க்கின்றவராகவும் [ராகவும் |
| निस्सीमकान्तिजलधिः | எல்லையற்ற காந்திக்கு சமுத்திரம்போன்றவராகவும் |
| अभितः | நாற்புறங்களிலிருந்தும் |
| अवेक्ष्यमाणः त्वं | தரிசிக்கப்படுகின்றவருமான தாங்கள் |
| मे रोगान् हर | எனது வியாதிகளை போக்கடிக்கவேண்டும். |

इति श्रीमन्नारायणीये रासक्रीडायां गोपीनां भगवत्समीपागमनवर्णनं नाम पञ्चषष्टितमं दशकं समाप्तम् ॥ ६५ ॥

आदितः श्लोकाः 667.  दशमस्कन्धे श्लोकाः 292.

## षट्षष्टितमं दशकम्—அறுபத்தாறுவது தசகம்.

रासक्रीडायां भगवत्कृतधर्मोपदेशवर्णनं विहारवर्णनं च—ராஸக்ரீடையில் பகவான் செய்த தர்மோபதேசத்தையும் க்ரீடையையும் வர்ணிப்பது.

उपयातानां सुदृशां कुसुमायुधबाणपातविवशानाम् ।
अभिवाञ्छितं विधातुं कृतमतिरपि ता जगाथ वाममिव ॥ १

| | |
|---|---|
| कुसुमायुधबाण-पातविवशानां | மன்மதபாணத்தால் அடிபட்டு பரவசர்களாய் |
| उपयातानां | அதனால் பக்கத்தில் வந்த |
| सुदृशां अभिवाञ्छितं | கட்டழகிகளுடைய அபீஷ்டத்தை |
| विधातुं कृतमतिः अपि | நிறைவேற்றத் தீர்மானித்திருந்தும் |
| ताः वामं इव | அவர்களைப் பார்த்து விபரீதம்போல |
| जगाथ | கூறினீர்களல்லவா. |

गगनगतं मुनिनिवहं श्रावयितुं जगिथ कुलवधूधर्मम् ।
धर्म्यं खलु ते वचनं कर्म तु नो निर्मलस्य विश्वास्यम् ॥ २

| | |
|---|---|
| गगनगतं मुनिनिवहं | ஆகாசத்தில் வந்து நிற்கும் முனிவர் கூட்டத்தை |
| श्रावयितुं कुलवधूधर्मं | கேட்கச்செய்வதற்காக குலஸ்திரீகளின் தர்மத்தை |
| जगिथ | உரைத்தீர்களல்லவா. |
| ते वचनं धर्म्यं खलु | தங்கள் திருவாக்கு தர்மத்தைவிட்டகன்றதே அல்ல. |
| तु | ஆனால் |
| निर्मलस्य | புண்யபாபஸம்பந்தமில்லாத மாசற்ற தங்களுடைய |
| कर्म नो विश्वास्यम् | பிரவிருத்தி நம்பக்கூடியதே அல்ல. |

आकर्ण्य ते प्रतीपां वाणीमेणीदृशः परं दीनाः ।
मा मा करुणासिन्धो परित्यजेत्यतिचिरं विलेपुस्ताः ॥ ३

| | |
|---|---|
| ताः एणीदृशः | அந்த மான்கண்ணிகள் |
| ते प्रतीपां वाणीं आकर्ण्य | தங்களுடைய விபரீதமான திருவாக்கைக் கேட்டு |
| परं दीनाः करुणासिन्धो | மிக வருத்தமுற்றவர்களாய், 'ஹே கருணைக்கடலே! |
| मा मा परित्यज इति | வேண்டாம், எங்களைக் கைவிடவேண்டாம்' என்று |
| अतिचिरं विलेपुः | வெகுநேரம் புலம்பினாரல்லவா. |

तासां रुदितैर्लपितैः करुणाकुलमानसो मुरारे त्वम् ।
ताभिः समं प्रवृत्तो यमुनापुलिनेषु काममभिरन्तुम् ॥ ४

| | |
|---|---|
| मुरारे त्वं तासां | முராரியே! தாங்கள் அவர்களுடைய |
| रुदितैः लपितैः | ரோதனத்தாலும் வருந்திக்கேட்பதாலும் |
| करुणाकुलमानसः | கருணைநிறைந்த மனதையுடையவராய் |
| ताभिः समं | அவர்களுடன் |
| यमुनापुलिनेषु | யமுனையின் மணல் திட்டுகளில் |
| कामं अभिरन्तुं प्रवृत्तः | இஷ்டப்போல் விளையாட ஆரம்பித்தீர்களல்லவா. |

चन्द्रकरस्यन्दलसत्सुन्दरयमुनातटान्तवीथीषु ।
गोपीजनोत्तरीयैरापादितसंस्तरे न्यषीदस्त्वम् ॥ ५

| | |
|---|---|
| चन्द्रकरस्यन्द-<br>लसत्सुन्दर-<br>यमुनातटान्तवीथीषु | சந்திரிகையின் பெருக்கினால் விளங்கும் அழகான யமுனைக்கரையில் |
| गोपीजनोत्तरीयैः | கோபஸ்திரீகளின் உத்தரீயத்தால் |
| आपादितसंस्तरे | உண்டுபண்ணப்பட்ட விரிப்பில் |
| त्वं न्यषीदः | தாங்கள் உட்கார்ந்தீர்களல்லவா. |

सुमधुरनर्मालपनैः करसङ्ग्रहणैश्च चुम्बनोल्लासैः ।
गाढालिङ्गनसङ्गैस्त्वमङ्गनालोकमाकुलीचकृषे ॥ ६

| | |
|---|---|
| सुमधुरनर्मालपनैः | காதிற்கினிமையான பரிஹாஸவசனங்களாலும் |
| करसङ्ग्रहणैः | கைகளைப் பிடித்துக்கொள்வதாலும் |
| चुम्बनोल्लासैः | பலவகைப்பட்ட சும்பன(முத்த)ஞ்செய்வதாலும் |
| गाढालिङ्गनसङ्गैः च | கட்டியாகத் தழுவிக்கொள்வதாலும் |
| त्वं अङ्गनालोकं | தாங்கள் பெண்டிர்களை |
| आकुलीचकृषे | பரவசப்படுத்தினீர்களல்லவா. |

वासोहरणदिने यद्वासोहरणं प्रतिश्रुतं तासाम् ।
तदपि विभो रसविवशस्वान्तानां कान्तसुभ्रुवामददाः ॥ ७

| | |
|---|---|
| विभो वासोहरणदिने | பிரபுவே! வஸ்திராபஹாரம் செய்த தினத்தில் |
| यत् वासोहरणं | (இடுப்பிலிருந்து) யாதொரு வஸ்திரத்தைவிழ்ப்பது |
| प्रतिश्रुतं | பிரதிக்ஞை செய்யப்பட்டிருந்ததோ |

| | |
|---|---|
| रसविवशस्वान्तानां | சிருங்காரரசத்தில் மூழ்கிய மனதையுடைய |
| तासां कान्तसुभ्रुवां | அந்தக் கட்டழகிகளுக்கு |
| तत् अपि अददाः | அதையும் செய்தீர்களல்லவா. |

कन्दलितघर्मलेशं कुन्दमृदुस्मेरवक्त्रपाथोजम् ।
नन्दसुत त्वां त्रिजगत्सुन्दरमुपगूह्य नन्दिता बालाः ॥ ८

| | |
|---|---|
| नन्दसुत | ஹே நந்தகுமாரா! |
| कन्दलितघर्मलेशं | சரீரத்தில் தோன்றிய சிறு வியர்வைத்துளிகளையுடையவனும் |
| कुन्दमृदुस्मेर- वक्त्रपाथोजं | முல்லைப்பூபோன்ற இளம் புன்னகை பூத்த முகாரவிந்தத்தையுடையவரும் |
| त्रिजगत्सुन्दरं | த்ரிலோகசுந்தரனுமான |
| त्वां उपगूह्य | தங்களை கட்டித்தழுவிக்கொண்டு |
| बालाः नन्दिताः | அப்பெண்கள் ஆனந்தமடைந்தனரல்லவா. |

विरहेष्वङ्गारमयः शृङ्गारमयश्च सङ्गमे हि त्वम् ।
नितरामङ्गारमयस्तत्र पुनः सङ्गमेऽपि चित्रमिदम् ॥ ९

| | |
|---|---|
| त्वं विरहेषु | தாங்கள் விட்டுப்பிரிந்தபொழுது |
| अङ्गारमयः सङ्गमे | தீக்கனல்போன்றவரும், சேர்ந்திருக்கும்பொழுது |
| शृङ्गारमयः च हि | சிருங்காரரூபியாகவும் ஆகிறீர். இது பிரஸித்தம். |
| पुनः तत्र | ஆனால் அந்த ராஸக்ரீடையில் |
| सङ्गमे अपि | சேர்ந்திருக்கும்பொழுதுகூட |
| नितरां अङ्गारमयः | மிகவும் தீக்கனல்போலிருந்தீர் |
| इदं चित्रं | என்பது விசித்திரம். |
| (अङ्ग अरमयः) | (ஹே கிருஷ்ண! அவர்களை ஆனந்தப்படுத்தினீர்). |

राधातुङ्गपयोधरसाधुपरीरंभलोलुपात्मानम् ।
आराधये भवन्तं पवनपुराधीश शमय सकलगदान् ॥ १०

| | |
|---|---|
| राधातुङ्गपयोधरसाधु- परीरंभलोलुपात्मानं | ராதையின் உயர்ந்த ஸ்தனங்களை நன்றாகக் கட்டிக்கொள்ளுவதில் ஆசையுற்ற மனதையுடைய |
| भवन्तं आराधये | தங்களை நான் ஆராதிக்கிறேன். |
| पवनपुराधीश | ஹே குருவாயூரப்பா! |
| सकलगदान् शमय | எனது வியாதிகளையெல்லாம் தணிக்கவேண்டும். |

इति श्रीमन्नारायणीये रासक्रीडायां विहारवर्णनं नाम
षट्षष्टितमं दशकं समाप्तम् ॥ ६६ ॥

आदितः श्लोकाः 677.  दशमस्कन्धे श्लोकाः 302.

## सप्तषष्टितमं दशकम्—அறுபத்தேழாவது தசகம்.

रासक्रीडायां भगवतस्तिरोधानादिवर्णनम्—ராஸக்ரீடையில் பகவான் மறைந்தது முதலியவற்றை வர்ணிப்பது.

स्फुरत्परानन्दरसात्मकेन त्वया समासादितभोगलीलाः ।
असीममानन्दभरं प्रपन्ना महान्तमापुर्मदमंबुजाक्ष्यः ॥ १

| | |
|---|---|
| स्फुरत्परानन्द- रसात्मकेन त्वया | பிரகாசிக்கின்ற பரமானந்தரசரூபியான தங்களால் |
| समासादितभोगलीलाः | அடைவிக்கப்பட்ட சுகபோகங்களையுடையவர்களும் |
| असीमं आनन्दभरं | அதனால் எல்லையற்ற ஆனந்தாதிசயத்தை |
| प्रपन्नाः अंबुजाक्ष्यः | அடைந்தவர்களுமான அந்த ஸ்திரீகள் |
| महान्तं मदं आपुः | மிகச் செருக்குற்றனரல்லவா. |

निलीयतेऽसौ मयि मय्यमायं रमापतिर्विश्वमनोऽभिरामः ।
इति स्म सर्वाः कलिताभिमाना निरीक्ष्य गोविन्द तिरोहितोऽभूः ॥

| | |
|---|---|
| रमापतिः | லக்ஷ்மீகாந்தனும் |
| विश्वमनोऽभिरामः | எல்லா ஜனங்களுடைய மனதைக்கவருகிறவனுமான |
| असौ अमायं | இந்த ஸ்ரீகிருஷ்ணன் கபடமில்லாமல் |
| मयि निलीयते मयि इति स्म | 'என்னிடத்தில் மயங்கியிருக்கிறான், என்னிடத்தில் மயங்கியிருக்கிறான் என்றே' |
| सर्वाः कलिताभिमानाः | எல்லோரையும் செருக்குற்றவர்களாக |
| निरीक्ष्य गोविन्द | கண்டு, ஹே கோவிந்தா! |
| तिरोहितः अभूः | தாங்கள் அவிடமிருந்து மறைந்தீர்களல்லவா. |

राधाभिधां तावदजातगर्वामतिप्रियां गोपवधूं मुरारे ।
भवानुपादाय गतो विदूरं तया सह स्वैरविहारकारी ॥ ३

| | |
|---|---|
| मुरारे तावत् भवान् | ஹே முராரியே! அப்பொழுது தாங்கள் |
| अजातगर्वां | கர்வமுண்டாகாதவளும் |
| अतिप्रियां | அதனால் மிகப்பிரியமானவளுமான |
| राधाभिधां गोपवधूं | ராதையென்று பெயருடைய கோபிகையை |
| उपादाय | அழைத்துக்கொண்டு |
| विदूरं गतः तया सह | வெகுதூரம் சென்று அவளுடன் |
| स्वैरविहारकारी | நிம்மதியாக விளையாடிக்கொண்டிருந்தீர்களல்லவா. |

तिरोहितेऽथ त्वयि जाततापाः समं समेताः कमलायताक्ष्यः ।
वने वने त्वां परिमार्गयन्त्यो विषादमापुर्भगवन्नपारम् ॥ ४

